5th August 1965] [Sri M. Rajah Iyer]

not very favourably received. I would like the Government to find out whether they cannot make the treatment in the hospital free for all. After all, their commitment would not be very high because Government servants receive free treatment, legislators receive free treatment and very many others who can say that their annual income is less than Rs. 1,500 get free medical treatment. However rich they may be, middle class people who have no fixed monthly income and whose sources of income cannot be easily assessed, can easily say that their monthly or annual income is less than a particular figure. Unfortunately, the fixed monthly paid non-Government servants like the teachers and others have to pay. After all, the mind, body and soul go together. Education is free and worship in temples is free. Why should we not make treatment in the hospitals also free in the Fourth Plan?

Thank you, Sir.

* திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி : கனம் தலைவர் அவர்களே, இன்றைய தினம் நாம் நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிப் பேச இருக்கிறோம். 1951-லிருந்து மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள் 1966-ம் வருஷத்துடன் முடியப்போகின்றன. இந்த மூன்று திட்டங்களின் பலன் பற்றி ஆராய்ந்து பார்த்து, அதன்படிதான் இந்த நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் போடப்பட்டிருக்கிறதாக இந்தப் புத்தகத்தில் வரையப்பட்டிருக்கிறது. சர்க்கார் கொடுத்திருக்கும் குறிப்புகள் ஒரு பக்கம் இருக்க, பொது ஜனங்களுக்கு இந்த மூன்று ஐந்தாண்டு திட்டங்கள், பதினைந்து வருஷ சேவை என்ன பலனை அளித்து இருக்கிறது என்று பார்ப்போமானால், பொதுஜனங்கள் அதற்கு எந்த மதிப்பும் கொடுப்பதாக நமக்குத் தெரியவில்லை. பதினைந்து வருஷமாக, நாட்டின் மேம்பாட்டுக்காகப் போடப்படும் திட்டங்கள் எவ்வளவு தூரம் சாதாரண மனிதனுக்கு உதவியாய் இருந்து இருக்கிறது என்று பார்த்தால், அதிக நன்மை இருப்பதாகத் தெரியவில்லை. ஒருக்கால் வருங்காலத்தில், வரப்போகும் பிரஜைகளுக்காக நாம் இப்போது கஷ்டப்பட்டுக்கொண்டு, சரியான உணவுகூட இல்லாமல் வயிற்றில் ஈரத்துணியைப் போட்டுக்கொண்டு இருக்கிறோமா என்று பார்த்தால் அதற்கும் ஒரு வரையறை உண்டு என்றுதான் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். சாதாரணமாக ஆரம்பித்த ஒரு ஐந்தாண்டு திட்டமானது, இப்போது 2,000 கோடி ரூபாய்க்கு மேலே போகிறது. அகில இந்தியத் திட்டம், நம்முடைய மாகாணத்திலேயே 750 கோடி ரூபாய்க்கு திட்டம் வரையப்பட்டிருக்கிறது. நம்முடைய மாகாணத்தில் வருமானம் நமக்குத் தெரியும். இப்பொழுது 163 கோடி ரூபாயாக இருக்கிறது. இந்த ஐந்தாண்டுகளுக்கு 750 கோடிக்கு திட்டம் இட்டு இருக்கிறார்கள். இவ்வளவு பெரிய திட்டத்தில் யார் யாருக்கு அல்லது எந்தெந்த வகைக்கு எவ்வளவு கொடுக்கப்படுகிறது என்பது தனிப் பிரச்னை. அதற்கு முன்பாக, அகில இந்திய ரீதியிலும் சரி, ராஜ்ய ரீதியிலும் சரி, இதிலே பாதித் தொகைக்கு மேலே விவசாயத்துக்கும் கைத்தொழிலுக்கும் செலவழிப்பதாகத் திட்டமிடப்பட்டிருக்கிறது. இந்தப் புத்தகத்தில் பார்த்தால், மூன்றாவது

திட்டத்தில் விவசாயத்தில் அதிகப் பலன் கிடைக்கவில்லை என்று சர்க்கார் அவர்களே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். எனக்கும் கிராமத்தில் கொஞ்சம் பரிச்சயம் உண்டு. அதற்கு என்ன காரணம் என்று பார்க்கப்போனால், அதற்கும் ஒரு வாக்கியம் உதவியாக இருக்கிறது. ஏற்கெனவே விவசாயத்தில் இருக்கிற நிலங்களிலேயே புதிதாகக் கண்டுபிடித்த முறைகளில், பக்கத்து ராஜ்ய முறைகளையோ, பக்கத்து தேச முறைகளையோ வைத்து, அதிலே நெல் பயிர் உண்டு பண்ணலாம் என்ற நோக்கத்தில் போயிருக்கிறதாகத் தெரிகிறதே தவிர, அதிகப்படி நிலங்கள் ஏருக்கு கொண்டு வரப் பட்டு விளைச்சலை அதிகப்படுத்த முயற்சி எடுத்து, அது பலன் அளிக்காததாக எழுதப்படவில்லை. மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில், மேல் நாட்டு ரசாயன உரங்கள், நம் உள்நாட்டில் தயாரானலும்கூட, சரியாக எடுபடவில்லை. அவைகள் சரியாக எடுபட்டாலும் தானிய உற்பத்தி அதிகமாகாது. வெறும் தாள் தான் அதிகம் கிடைக்கும். ஆனல், பூச்சிகளை உண்டுபண்ணும். எப்படி இத்தனை விதமான பூச்சிகள் தானியத்துக்கு திடீரென்று வருகிறது என்பது தெரியவில்லை. ஆதிகாலத்தில் கொஞ்சம் பூச்சிகள் வரும், வேப்பம் பிண்ணாக்கைப் போடுவார்கள். இப்போது உரங்கள் என்று சொல்லி புதுப் புதுப் பெயரில் எவைகளையோ உபயோகப்படுத்துவதால், பூச்சிகள் நிறைய உண்டாகி, பிறகு அதைக் கொல்ல "போலிடால்" போன்ற அயல் நாட்டு மருந்துகளை உபயோகிக்க வேண்டியிருக்கிறது. அந்த மருந்தைத் தொட்டாலே மனிதன் இறந்து விடுகிறான். இந்த ரசாயன உரம்தான் பூச்சிகளுக்குக் காரணமா என்று பரிசீலிக்க அரசாங்கத்தார் கடமைப்பட்டிருக்கிறார்கள். இருக்கக்கூடிய நிலங்களில் புது முறைகளினல் கடந்த 15 வருஷங்களில் உற்பத்தியை அதிகப்படுத்த முடியவில்லை என்றால் அதைப் பற்றி நன்கு ஆராய வேண்டியது அவசியமாகும். ஒரு சாதாரண மனிதன் ரயிலில் போகும்போது சாகுபடியாகாத நிலங்கள் நாட்டில் அதிகமாக இருப்பதைக் காண முடிகிறது. வட ஆர்க்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களில்தான் சாகுபடிக்குக் கொண்டுவரப்பட்ட நிலங்கள் அதிகமாக இருக்கின்றன. மீதி ஜில்லாக்களில் சாகுபடியாகாத நிலங்கள் அதிகம் காணப்படுகின்றன. நாட்டில் இந்த நிலங்கள் அதிகமாக இருப்பதால் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் அவசியமில்லை. (சிரிப்பு) அதிகமான ஜனத்தொகையைக் கொடுத்திருக்கும் கடவுள் சாகுபடிக்குக் கொண்டுவர வேண்டிய நிலங்களையும் நிறையக் கொடுத்திருக்கிறார்.

3-50 p.m

கைத்தொழில் துறையில் நம் மாநிலம் மிகவும் முன்னேறியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இது குறித்து கனம் கைத்தொழில் அமைச்சர் பெருமை கொள்ளலாம்; நாமும் அவருக்குப் பெருமை அளிக்கலாம். மிகவும் கீழே இருந்த நாம் பல வகையான கைத்தொழில்களில் ஈடுபட்டு முன்னேறியிருக்கிறோம்.

கல்வியை எடுத்துக்கொண்டால், 1½ லட்சம் மாணவர்கள் எஸ்.எஸ்.எல்.சி. வகுப்பிற்கு வருகிறார்கள் என்று புள்ளிவிவரங்கள் தெரிவிக்கின்றன. ஆனல் கல்விக்கும் ஆசிரியர்களுக்கும்

5th August 1965] [திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி]

போதிய மதிப்புக் கொடுக்கப்படவில்லை. கல்வியினால்தான் நாடு முன்னேறும் என்ற விஷயம் அகில இந்திய ரீதியில் ஏற்படவில்லை. பல திட்டங்களுக்காக மொத்தம் 20,000 கோடி ரூபாய் செலவழிக்கும்போது ஆசிரியர்களுக்கென ½ கோடி ரூபாய்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆசிரியர்களுக்கு மேலும் பணம் கொடுக்க வேண்டுமானால் அதற்கு திட்டத்திற்கு வெளியில் வகை செய்து கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. என்ஜினியர்கள், விஞ்ஞானிகள், கைத்தொழில் நிபுணர்கள் முதலியவர்கள் சில பேர்கள் உருவாக்கப்பட்டாலும் அவர்கள் ஆசிரியர்களால்தான் உருவாக்கப்படுகிறார்கள், நான்காவது திட்டத்தில் கல்விக்காக 75 கோடி ரூபாய் செலவழிக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. சென்ற வருடம் கல்விக்காக 39 கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தச் செலவில் கட்டிடங்களுக்கான செலவே 15 கோடி ரூபாய்க்கு மேல் வருகிறது. பள்ளி கட்டிடங்களுக்கும், ஹாஸ்டல் கட்டிடங்களுக்கும் நிறையப் பணம் செலவழிக்கப்படுகிறது. சர்க்காருக்கு கல்லிலும் சுண்ணாம்பிலும் தான் அதிக நம்பிக்கை இருக்கிறதே தவிர மனிதனிடமும் மனோ சக்தியிலும் அதிக நம்பிக்கை இல்லை என்று நான் அடிக்கடி சொல்லுவதுண்டு. இந்தியா பூராவிலுமாக 20 லட்சம் ஆசிரியர்கள் இருப்பார்கள். பாஷை வேற்றுமையோ மாநில வேற்றுமையோ பார்க்காமல் இவர்கள் ஒவ்வொருவருக்கும் 50 ரூபாய் கொடுப்பது என்றால், அதற்கு 120 கோடி ரூபாய்தான் வேண்டும். கல்வித் துறையில் ஆரம்ப ஆசிரியர்கள்தான் மிகவும் முக்கியமானவர்கள். தொழிலாளர்களும் சமூக ஊழியர்களும் மற்ற எல்லோரும் இவர்களால்தான் உருவாக்கப்பட வேண்டும். ஆரம்ப ஆசிரியர்களுக்கும் மற்ற ஆசிரியர்களுக்கும் அகில இந்திய ரீதியில் ஆளுக்கு மாதம் 50 ரூபாய் அதிகமாகக் கொடுக்க வேண்டுமென்றால், திட்டத்தில் 120 கோடி ரூபாய்தான் அதிகமாகச் செலவாகும். 2,000 கோடி ரூபாய் செலவழிப்பவர்களுக்கு இந்தத் தொகை பெரிதா ?

அடுத்தபடியாக, எல்லாக் கட்டங்களிலும் அதிகமான மாணவர்களுக்குக் கல்வி அளிக்கத் திட்டமிடப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கல்லூரிகளிலும், எஸ்.எஸ்.எல்.ஸி. வகுப்பிலும் அதிகமான மாணவர்களைக் கொண்டு வந்துவிடப் போவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பள்ளிக்குச் செல்லும் 80 லட்சம் குழந்தைகளில் வருஷத்தில் 7 லட்சம் போவது எஸ்.எஸ்.எல்.ஸி.க்குப் போக வேண்டும். இப்போது அத்தனை பேர் போவதில்லை. 15 சதவிகிதம் பேர்களே பள்ளிகளுக்கு வருவதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. எவ்வளவு மதிய உணவு கொடுத்தாலும், பள்ளிக்கு வர வேண்டிய குழந்தைகளில் 100 சதவிகிதத்தினரும் வருவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. காரணம், சமூகத்தின் போக்கு இப்போது அப்படி இருக்கிறது. பல குழந்தைகள் ஐந்து வகுப்புகள் படித்தவுடன் பள்ளியை விட்டுவிட்டுப் போகின்றனர். அது பற்றிய புள்ளி விவரங்கள் கொடுக்கப்படவில்லை. பக்கிங்ஹாம் கால்வாய்க்கு அருகில் குடியிருப்பவர்களைப் பார்க்கும்போது என் மனம் மிகவும் வேதனையடைகிறது. அங்குள்ள குடிசைகளில் இருப்பவர்களுக்கு திட்டத்தில் என்ன செய்யப்பட்டிருக்கிறது?

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** இவர்களுக்காக ஒரு 'ஸ்கீம்' இருக்கிறது.

**திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி :** போதிய ஹரிஜனங்கள் கவனிக்கப் படவில்லை. ஹரிஜனங்களில் ஒரு லட்சம் பேர் தான் பயனடைய முடியும், Fringe of the Problem -ஐத் தான் தொட முடிகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு வீடுகள் கட்டி காலியாக இருக்கின்றனவா? நரிக்குறவர்களுக்காக வீடுகள் கட்டினோம்.

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** வீடுகள் கட்டினோம். அந்த வீடுகளுக்கு இவர்கள் போகாததால், அவைகளை என்.ஜி.ஓ-க் களுக்குக் கொடுத்திருக்கிறோம்.

**திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி :** நம் சகோதர சகோதரிகளாகிய இவர்கள் ஆபாசமான இடங்களில் குடியிருப்பதைப் பார்க்கும் போது எனக்கு ரொம்ப வருத்தமாக இருக்கிறது. ஹரிஜனங் களுக்கு மட்டுமே 'ஸ்லம் க்ளியரன்ஸ் ஸ்கீம்' வந்திருக்கிறது, மற்றவர்களுக்கு இந்தத் திட்டம் வாவில்லை என்று, கனம் அங்கத் தினர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள புத்தகத்திலிருந்து தெரிகிறது. இந்த ஏழை மக்களுக்கு பாலிடெக்னிக்கில் கல்வி அளிக்கத் திட்டம் இருக்கிறதா? இவர்களை விவசாயத் திட்ட வேலைகளில் சேர்த்துக் கொள்கிறோமா? இவர்களுடைய நலனுக்கு என்ன செய்யப்பட்டி ருக்கிறது? சென்னையில் இவர்கள் என்ன பண்ணுகிறார்கள்? இவர் கள் எத்தனையோ பேர் பள்ளிக்குப் போகாமல் கோலி ஆடுகிறார் கள். இவர்கள் பள்ளிக்கும் போகாமல் ரிக்ஷாவும் இழுக்காமல் தெருவைச் சுற்றிக்கொண்டிருக்கிறார்கள். இவ்வளவு man power வீணாகப் போகிறதே! எவ்வளவு பேர் வேலை இல்லாமல் சுற்று கிறார்கள் என்ற புள்ளிவிவரம் இருக்கிறதா? பிச்சைக்காரர்களை ஜெயிலில் அடைப்போம் என்று சொல்லும் சர்க்கார் அழுக்கு வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு ஊரைச் சுற்றும் இவர்களுடைய நலனுக்கு என்ன திட்டம் வைத்திருக்கிறது? புள்ளிவிவரம் இல்லாத குறையை எடுத்துச் சொல்லத்தான் இவற்றைக் குறிப் பிட்டேன். ஐந்தாம் கிளாஸ் படித்துவிட்டு பள்ளியை விடுகிறவர் கள் என்பது அந்தக் காலத்திலிருந்து இருக்கிறது. இதற்குத்தான் தேசப்பிதா காந்தியடிகள் பேசிக் எஜுகேஷன் என்று சொல்லக் கூடிய அடிப்படைக் கல்வியை கொண்டுவரவேண்டுமென்றார். அப்படி ஐந்து ஆறு வயது முதல் பதினாறு வயதுக் குழந்தை களுக்கு அது அளிக்கப்பட்டிருக்கவேண்டும். இப்போது உள்ள தைப்போல மாண்டிசோரி அம்மையார் முறை போன்ற பள்ளி களைச் சொல்லவில்லை, நவநாகரிக பள்ளிகளைச் சொல்லவில்லை. பேசிக் எஜுகேஷன்-ஐ நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதைக் கற்றுக்கொடுத்திருந்தால் பிறரோடு ஒத்துழைக்கும் குணம், பகிர்ந்து உண்ணவேண்டுமென்ற உணர்வு, ஒற்றுமை மனம், பிறர் வந்தால் வாருங்கள் என்று மரியாதையோடு அழைக்கும் தன்மை இவையெல்லாம் வரக்கூடிய வகையில் அந்த அடிப்படைக் கல்வி வகை செய்யும். ஆனால் நாம் அடிப்படைக் கல்வியை விவசாயத்

4 00 p.m.

5th August 1965] [திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி]

திற்கும், நூல் நூற்பதற்கும் மட்டும்தான் வைத்துக்கொண்டிருக்கிறோம். நூற்பு என்றால் பஞ்சு மூக்கில் போய்விடுகிறது என்கிறார்கள், சாட்டை இல்லை என்கிறார்கள். இப்படி யெல்லாம் அந்தத் திட்டம் நல்ல முறையில் ஆரம்பக்கல்வியில் செய்யப்படவில்லை. நம் நாடு விவசாய நாடாக இருப்பதால் அதில் கல்வி அளிக்கப்பட வேண்டும். அதையும் கவனிக்கும் முறையில் இரண்டரை மணி நேரம் கல்வி போதிக்கும் திட்டம் இருக்கவேண்டும். நம் தமிழ் நாடு மிகவும் பண்பாட்டுடன் வாழ்ந்த நாடுதான். தமிழ்நாட்டுக் குழந்தைகள் சிறந்த அறிவோடுதான் விளங்கின. இப்போது மாண்டிசோரி முறையில் சொல்வதுபோல கலர் பொம்மைகளை வைத்து பழக்கவில்லை அப்போது. இப்போது மூன்று வயதானாலும் சினிமா பாத்து விட்டு அதில் வருவதை நன்றாகப் பாடுகிற குழந்தைகளைப் பார்க்கிறோம். இக்குழந்தைகளுக்கு புலன் அடக்கம் வேண்டியிருக்கிறது. புலன் வளர்ச்சி பண்பாட்டினால் வந்தது. சிறிய குழந்தைகளுக்கு சமூகத்தில் எப்படி பழகுவது, தேசாபிமானம் எப்படி வளர்க்கப்படுவது, நம்முடைய தேசம் இது, நாம் எல்லாம் ஒன்று என்ற எண்ணமெல்லாம் எப்படி வளருவது? அவையெல்லாம் அடிப்படைக் கல்வியால் வரும், வெறும் கணக்குகளையும் மற்றவைகளையும் படிப்பதால் இவை வந்துவிடாது. இவற்றை வைத்துக்கொண்டு நாம் பழைய முறைகளை மறந்துவிடுகிறோம். அடிப்படைக் கல்வியால் நாட்டுப் பற்று வளர்க்கப்பட்டால்தான் பதினேரு வயது வரையுள்ள குழந்தைகள் எங்குபோனாலும், எந்தத் தொழில் செய்தாலும், வீட்டிற்கும், சமூகத்திற்கும் ஹானி ஏற்படாமல் தேசாபிமானத்தோடு கருணை உள்ளத்தோடு, தியாக சிந்தையோடு இருப்பார்கள். கல்வித்துறையில் அதற்கான வகை இந்த நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செய்யப்பட்டிருக்கிறதா? content of education முக்கியம். நம்முடைய கல்வியால் நமக்கு ஏற்பட்டிருக்கும் பெரிய நன்மை என்ன என்று சொல்லமுடியாத நிலையில் நாம் இருக்கிறோம். அது எப்படி நன்மை பயக்கும்படி செய்யவேண்டுமென்று யோசிக்கவேண்டும். கல்விக்காக 750 கோடி செலவழிக்கிறோம். நம் தமிழ் நாட்டுக்கு மட்டும் 75 கோடி செலவழிக்கிறோம். அதோடு அவ்வப்போது வருஷா வருஷம் 38 கோடி வேறு இருக்கிறது. ஐந்து வருஷத்திற்கும் 750 கோடி ரூபாய் செலவழிக்கிறோம். கல்விக்காக 75 கோடி ரூபாய் இருக்கிறது. அதை எதற்காக செலவழிக்கிறோம்? குழந்தைகளை பள்ளிக்கு அனுப்பும் பெற்றோர்களைக் கேட்டால் பள்ளிக்கு அனுப்பப்படும் தங்கள் பிள்ளைகள் நல்ல பிள்ளைகளாக வருவார்கள் என்ற நம்பிக்கையோடு அனுப்புவதாக சொல்வார்கள். அவர்கள் அப்படித்தான் நினைக்கிறார்கள். அதோடு அவர்கள் தங்கள் பிள்ளைகள் சம்பாதிப்பதற்காக படிக்கவைப்பதாகத்தான் செல்வார்கள். பள்ளிக்கூடம் போனால் அங்கே ஒழுக்க முறைகள் பாடங்களில் போதிக்கப்படவேண்டும். அப்படியில்லாததால் சமூகமே ஒழுங்கில்லாமல் போகக்கூடிய நிலை ஏற்படுகிறது. வெள்ளையர்கள் தூவி விட்ட விஷ விதை இன்றைய பாடத்திட்டத்தில் இன்றும் இருக்கிறது. அது வளர்ந்து அதிலிருந்து வீசுகின்ற விஷக்காற்றைத் தான் நாம் அடிக்கடி பார்க்கிறோம். வடநாடு தென்னாடு என்றும்

இனம் என்றும் இப்படிப்பட்ட விஷயங்கள் சரித்திர பாடங்களில் நிறைய இருப்பதுதான் சிறிய குழந்தைகள் மனம் கெட்டுப் போவதற்குக் காரணம். சுதந்திரம் வந்தபிறகு பதினேட்டு வருஷம் ஆகியும் அந்த சரித்திர புத்தகத்தை மாற்றவில்லை. சமூக தீங்கு விளைவிக்கும் கணக்குப் புத்தகங்கள் மாறியதாகத் தெரியவில்லை. பாலின் ஜலமும் உயர்ந்தாகக் காப்பிக் கொட்டையில் மட்ட ரகக் காப்பிக் கொட்டையை கலப்பதும் கணக்கு புத்தகத்தில் இருக்கின்றன. ஒழுக்கத்தை வளர்க்காத கல்வி, கல்வி இல்லை. இதை உணரவேண்டும். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆசிரியர்களுக்கு சம்பளத்தை கூட்டவேண்டுமென்பது ஒன்று, பாட அமைப்பு மாற வேண்டுமென்பது ஒன்று. இதற்குத்தான் காலஞ்சென்ற கோகலே அவர்கள் தேசியக் கல்வி வேண்டுமென்று சொன்னார்கள். ஒவ்வொரு பிள்ளையும் தன் தேசத்தின் பெருமையையும் பண்பாட்டையும் காப்பாற்றக் கூடிய அளவுக்கு, பெரியவர்கள் எந்தவகையில் வாழ்ந்து பிற நாடுகள் அவர்களைப் பார்த்து ஆச்சரியப்படத்தக்க நிலையில் இருந்தார்கள் என்பதையெல்லாம் தெரிந்து கொள்ள உதவுவதுதான் தேசியக் கல்வி. இப்போதெல்லாம் படித்தவர்கள், படிக்காதவர்கள் என்று தனி வகுப்பாகக் கருதுகிறார்கள். எங்கும் இந்தியாவைப்போல் நூற்றுக்கு நூறு படித்தவர்கள் கிடையாது. எஜுகேஷன் வேறு, இன்ஸ்ட்ரக்ஷன் வேறு. பள்ளியில் சொல்லிக் கொடுப்பது இன்ஸ்ட்ரக்ஷன், பண்பாட்டில் வருவது எஜுகேஷன் என்பது. அந்த பண்பாட்டை பிரகாசிக்க செய்வதுதான் கல்வி என்று விவேகானந்தர் சொல்கிறார். அதற்காகதான் ஆசிரியர்கள் ஏற்பட்டிருக்கிறார்கள். நம் பொது மக்களுக்கு கல்வி இல்லை, அறிவீனமாக இருக்கிறார்கள் என்று சொல்கிறார்கள். இந்தியாவைப்போல பண்பாடுடைய நாடு கிடையாது. எழுத்து தெரிந்து கொண்டு அரை மணி, ஒரு மணி பேப்பர் படிப்பதா கல்வி? மனிதன் சமுதாயத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதை போதிப்பதுதான் கல்வி. இப்போது பள்ளிகளில், காலேஜுகளில் நடப்பது என்ன? பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதும், புத்தகங்களைப் பார்த்து, அதிலுள்ளவற்றை அப்படியே நெட்ரூப் போட்டு பரீட்சைகளில் வாந்தியெடுக்கும் பழக்கமும்தான் இப்போது இருக்கிறது. அதைத்தான் பரீட்சை என்று சொல்கிறார்கள். பிள்ளைகளை அன்றாடம் மேற்பார்த்து பள்ளிகளில் அவர்கள் தினசரி செய்கின்றவற்றை கவனித்து நல்லொழுக்கம், பரோபகாரம், சகிப்புத் தன்மை, பிறரிடம் நடந்துகொள்ளும் முறை இவற்றையெல்லாம் பார்த்துப் பார்த்து மார்க்கு போடவேண்டும். அப்போதுதான் நாம் எதிர்பார்க்கும் ஒற்றுமை, நேர்மை வளரும். காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரையுள்ள மக்கள் ஒரே மக்கள் என்ற எண்ணம் வரும். இன்றுள்ள திட்டம் அதைப் போதிக்கவில்லை. அதற்கு வழி தேடவில்லை. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு முன்பு ஆசிரியர்கள் நிலை உயர்ந்தால்தான் நல்லது. பாட திட்டமும் தேசியமயமாகவேண்டும். விவசாயிகள், கைத்தொழில் செய்பவர்கள் எல்லாம் எப்போது வேலைக்கு போனாலும் நாம் செய்கிற வேலை இந்த தேசத்துக்காக, நம் நாட்டுக்காக என்ற

5th August 1965] [திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி]

எண்ணம் வரவேண்டும். நாம் செய்யும் நல்ல காரியங்கள் ஒவ்வொன்றும் நம் நாட்டுக்குச் செய்கின்ற நன்மை என்ற எண்ணத்தை உண்டாக்குவது கல்விதான். இதைச் செய்யாதது வருந்தத்தக்கது என்று சொல்லிக் கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

4-10 p.m.

Dr. H. V. Hande : Mr. Chairman, Sir, at the outset I would like to state clearly my views on the Draft Fourth Five-Year Plan that has been placed before us by the Madras Government. I do not agree *with it in toto*. The memorandum prepared by the Planning Commission on the Fourth Five-Year Plan envisages an outlay of Rs. 22,600 crores. That is what is stated here. Of this the outlay in the public sector will be of the order of Rs. 15,620 crores. Let us now see what was the outlay in the public sector in the First Plan. I have calculated this and it is about Rs. 1,960 crores. During the Second Plan it was Rs. 4,600 crores and during the Third Plan it was Rs. 8,250 crores. For the Fourth Plan the outlay is expected to go up to Rs. 15,620 crores. In other words the outlay of Rs. 1,960 during the First Plan has been boosted up to Rs. 15,620 crores for the Fourth plan. These, of course, relate to the Government of India.

In this connection, the Hon. the Chief Minister told us in his speech that there has been tremendous buoyancy in the matter of revenues. What was Rs. 90 crores in the beginning of the Third Five-Year Plan had now gone up to Rs. 160 crores. I would like to stress that this is only imaginary because in the beginning of the Third Plan the value of the rupee was nearly equal to 30 paise of the original rupee value but at the end of the Third Plan the value of the rupee has come down to 15 paise.

The Hon. Sri R. Venkataraman : May I know what are the statistics or the source of information on which the hon. Member gives out this view?

Dr. H. V. Hande : Sir, I have got with me the book by 'Shenoy' borrowed only from our Library. I am prepared to show this book to the Hon. Minister any time. That book is my authority. I will be happy to have better information on the matter from the Hon. Minister. Whatever it is, my point is the Rs. 90 crores of revenue realised at the beginning of the Third Plan was equal only to Rs. 30 crores according to my valuation and the Rs. 160 crores now realised is worth only Rs. 25 crores on the basis of the original value of the rupee. The intrinsic value of the rupee has definitely gone down and it cannot be disputed. Even if this view is not accepted, I should like to state that the buoyancy is not such as we are given to understand from the figures. We got only twice the revenue and this increase is due to the fact that certain amounts of sales tax which we were not realising before on account of oversight or inefficiency, now we are collecting by putting forth extra efficiency. The increase in revenues is not due to a real increase in the national income. The national income has not gone up. It is because we have begun to realise certain taxes which we did not do earlier.

Sir, after having established the fact that our revenue position is in a very bad shape and there is not that buoyancy claimed for it by the Hon. the Chief Minister, I would like to refer to another question, namely, whether we would be able to raise Rs. 750 crores from the public and redistribute it effectively. Whenever we collect money from the public we have a heavy responsibility in redistributing it in such a way that the gulf between the 'haves' and 'have nots' is bridged as much as possible. This work of redistribution should be done with great care and a sense of responsibility. We should not fritter away the amount collected from the public. In this matter we owe a great responsibility to the public because it is their money and not ours.

Now, Sir, coming to my next point, I would like to ask what are our economic ills and the problems facing us. Our desire is that every Indian and if we confine our attention now only to Madras State, everyone living in Madras State should have the basic necessities and they are mainly four, namely, food, shelter, clothing and employment. How best can we provide these basic necessities to our people? Can that be achieved by this sort of fantastic collection of revenues and redistribution by the State which amounts to a sort of State capitalism? Have we the right to collect the money from the public and run industries? Have we the right to start capitalistic industries? Have we the right to play with the amount that we realise by way of taxation from the public? These questions I would like to pose before our Government for a proper answer and clarification.

In this connection, Sir, I would like to submit one point regarding production. It may not be strictly within the scope of the discussion before us. To be able to appreciate fully the draft of the Fourth Five-Year Plan we must examine that aspect of the question and have a clear understanding. How are material resources augmented? By increased material production. I am sure everyone is agreed on that. We are also agreed that the four problems or ills facing us are housing, clothing, shelter and employment. The question now is how to solve those problems. Every one is agreed that these problems could be solved only by increasing material production. The next question is how best we can increase material production. Can that be done by the method now adopted by our Government or adopting a purely totalitarian method or are we to encourage a free economy? There are only three methods by which this could be achieved. One method, the totalitarian method had already been experimented by the Communist countries. The other is the method adopted by the liberal countries such as West Germany and Japan and known as the liberal economy. The adopting of these methods augments material production to a certain extent. In the one there is the factor of incentive as is done in free economics and in the other there is the threat of the bayonet or the gun as is done in the Communist countries where a person is made to do the work; work is extracted and production is increased by the use of force. Unfortunately,

we have been experimenting with the third method which has so far not been experimented in any country in the world. This method is known as State Capitalism. We collect the money from the public by way of taxation and run industries without either the factor of incentive or the factor of force. We have adopted the middle path with the result that production has gone down considerably. The figures given particularly with reference to agricultural production are revealing. I will come to that shortly. By adopting this, the third method or the middle path, we have neither achieved the material production of the liberal countries nor the communist countries. We prefer, I personally prefer the liberal method because the material production there is more than what has been achieved in the totalitarian countries. There is this incentive factor in the liberal economy. Even the totalitarian countries have realised that incentives play an important part in increasing material production. Even in Russia it has now been proved that in small farms and house compounds they are able to produce more vegetables than in the collective fams. I have got authority to prove that even in Russia there is greater production of vegetables and food in private farms than in the collectives. Of the two application of force and the offer of incentives. I would prefer the offer of incentives to increase material production.

Now, let me take agriculture. During the Third Plan an amount of Rs. 36.98 crores would have been spent on agricultural production. This was aimed at stepping up production from 53,24 lakhs of tonnes to 69.78 lakhs of tonnes that is an increased production of 16 lakhs tonnes. This is in regard to food crops. This increase in production by 16 lakhs tonnes is to be achieved by investing Rs. 36.98 crores. Now under the Fourth Plan we propose to spend Rs. 85 crores to step up production from 65 lakhs tonnes to 82 lakhs tonnes. During the Third Plan the increase expected was from 53.24 lakhs tonnes to 69.78 lakhs tonnes. In other words for increasing production by 16 lakhs tonnes we spent nearly Rs. 37 crores, during the Third Plan. For increasing the production by the same quantity of 16 lakhs tonnes we are going to spend Rs. 85 crores under the Fourth Plan. We are to spend double the amount that we spent during the Third Plan to increase production by the same quantity during the Fourth Plan. This proves the buoyancy claimed for our revenues by our Chief Minister. The theoretical paper calculations show that we expect to get 82 lakhs tonnes. How much we will get in practice, in reality is quite another thing.

Now let me explain to the House how this figure has been arrived at. I invite the attention of the hon. Members to paragraph 9 on page 20 of the book supplied to us, an interesting piece of literature given to us. It is stated there that the principal objects of the Fourth Plan in regard to agricultural production are, (1) to assure a per capita consumption of foodgrains of 18 ounces per day, etc., etc. The total requirements of consumption at 18 ounces per head per day per annum for the population anticipated

by 1970-71 will be of the order of 61.41 lakhs tonnes. Besides, provision will have to be made for seeds at 1.5 lakh tonnes. They have arrived at the figure of 82 lakhs tonnes, therefore, by finding out the requirements of each individual, the requirements of the population as a whole and the seed requirements. That is, they have arrived at the figure by finding out our requirements and not based on our capacity to produce it. The figure is based on our requirements which is something like this. I want to take up a job. I want a salary of Rs. 450 to meet all my requirements. I want two cups of coffee. I note down my daily requirements and then calculate on that basis my monthly requirements. I want so much for rent, so much for this, that and so on. And on that basis I require Rs. 450 to lead a decent life. So I start finding out a job where I can get Rs. 450 a month when getting a job itself is a problem. Therefore I say the estimate of production should be realistic, based upon our capacity such as the extent of cultivable land available, the fertility of the soil, the incentive factor that we have introduced among the tillers of the soil, their resources and not on our requirements. We cannot say we want so many things and so we will start getting it. From where will you get it? The same mistake was committed when the Third Plan was drafted. They said 'We want so many tonnes'. What happened? They got less than what they wanted. So let us not waste our time in calculating how much we want. Let us find out how much we can get so that even if we are surplus there is no harm. There are others to whom we can give. It is not as if we lack enthusiasm for producing more. We are able to produce more food. We can give it to other State also. We can get money by selling it which is possible.

4-20 p.m.

After having stressed this, I want to say that another important factor, that is, the land policy followed by us, is the main cause for this debacle. I have got statistics to show that there has been increase in production from what it was before. Now the production is much more. My submission is that because of huge investment on fertilisers, the cost of production of food has been increased. Seventeen lakhs of additional tonnes of foodgrains is proposed to be achieved in the Fourth Five-Year Plan period. My submission is that as hon. Deputy Leader of the Opposition drew our attention some time before, the adoption of land policy has resulted in this food debacle. We have removed the incentive in the farmers for producing more food. The farmers must be allowed to cultivate their lands and produce food without any restrictions.

The storage accommodation in Government godowns is not satisfatory. I came across a very interesting item which I have got here with me. Sir, as a result of no proper storage, out of 85 million tonnes of country's whole agricultural produce, nearly 1½ million tonnes are going to waste. That is the figure that they have given here. They have asked the Central Government to give more funds to make researches as to how this wastage is

5th August 1965] [Dr. H. V. Hande ]

to be stopped. In the name of the Food Corporation, paddy is collectd from the villagers, and we do not know whether the foodgrains collected are properly stored. We are collecting paddy, but have we got the capacity to store it? We have been dilly-dallying with this question. When we are not able to get food, we are importing foodgrains from foreign countries. Our hard-earned tillers' food is being wasted by way of storing the foodgrains improperly. What exactly is the reason for this kind of wastage? I will just try to analyse this. We have been trying to collect so much rice from the people. In addition we are taxing the people to the extent of Rs. 750 crores. My hon. Friend Mr. Rajah Iyer was thinking of milk and honey flowing in the land. I am telling you that it is going to be a very terrible thing. The taxes that are levied by the Centre and the States will fall on the poor people. What is the national expenditure? It is about Rs. 22,000 crores for the whole country that has been envisaged. In other words, we are spending nearly Rs. 4½ thousand crores for each year. We have to get this Rs. 4½ thousand crores for these plans. Again for running the administration we want more money. The State taxation is there, the Central taxation is there and also the Corporation taxes are there. This Rs. 4½ thousand crores goes to plan and another 2 to 3 crores will go as administrative expenses. We have no right to go on spending the tax-payers' money on these plans. We have a bureaucratic machinery.

(Deputy Chairman in the Chair.)

Let us take our State Secretariat. A number of secretariat I.C.S. and I.A.S. officers have been relegated to the Food Corporation. In other words, the I.C.S. and I.A.S. Officers who ought to have been working on the administrative side are getting extra load. The pay and allowances are to be paid by the Government and the expenditure incurred for running the administrative machinery for food distribution has to be worked out. The cost of food is going high and high. Intrinsically Government are spending a lot on the plethora of officers, who go about parading in their jeeps to the farmers' holdings. I may tell you that they give so much trouble to the people and the farmers are asked to part with the food that they have. Innumerable complaints and difficulties experienced by the agriculturists have been brought to the notice of the Government, and I do not know what action has been taken on them. These officers go in jeeps and trouble the poor ryots who do not know the rules and regulations to part with the rice. They have to part with it, and the result is that the farmer has no incentive to produce more. He wants to be free from unnecessary harassment of the jeepwallahs. Even the tiller has lost incentive to produce food. Unless he is made to realise that he has a place in the society, whatever be the plans they will be failures only. So, the bureaucratic machinery has taken away the incentive of the farmer. It is something like a block of ice. We have collected a block of ice and when we send it to the farmer or to the poor ryot, that ice gets lightly melted

in the process. What I am trying to point out is the bureaucratic machinery is so top-heavy and so lop-sided that we are spending a large amount only for preserving bureaucraacy and officialdom. The amount that we spend on the bureaucratic machinery gets melted by the time it reaches the people. We have Block Development Officers in the Blocks. They also do not have sympathy for the farmers. I saw a number of pictures in Tamil papers about the possible methods of farming. I took the pictures to a number of farmers and asked them, 'What is your idea about these pictures ?' They said, 'Sir, all these are in books; we do not got anything '. That is the misery of the poeple. This is the way the publicity department is functioning. They do not get anything. This is something which we have to realise. We are investing a huge sum of Rs. 80 crores on production. Interest should be created in the farmers. When a person goes to the Block Development Officer, he is not given seeds. I am sure my hon. Colleague will agree with me that good seeds are taken away by the officials. It is a matter for investigation. I have complained that seeds which were kept to augment supply were taken away from the farmers. I had gone to the villages and known these things. I have personally visited the villages. I wanted to see at first hand things. The people are so miserable I see. When they go to the Block Development Officers, they are not given proper facilities. They are asked to come on the next day. On the next day when they go there, the answer is given that the officer is not there. Therefore, the poor ryot gets something in black market. So much of money invested on production melts away. Therefore, we should do something about this.

4-30 p.m.

Sir, I next want to speak a few words about 'Health'. I find under 'Health' a sum of Rs. 13.57 crores was spent in the third five-year plan period. The provision for the fourth five-year plan is Rs. 39.98 crores. This is three times. What is the net result? I can tell the House that to-day if a poor patient goes to the General Hospital or any other hospital in the morning to get a bottle of medicine, by the time he gets it he loses half a day. After having envisaged an expenditure of Rs. 30 crores for expenditure on 'Health', if this is the state of affairs, how is the poor man to get any relief? Mr. Rajah Iyer spoke about people getting under Rs. 100. Their position is pathetic. There are so many patients who do not even get beds in the hospitals. In this metropolis, if patients do not get beds in the hospital, and if there are no sufficint beds, what is the plan for? I cannot understand. The poor patient does not have the money to get a taxi to take him to the hospital. He has to ring up the ambulance or get into a cycle-rickshaw. This is the position in Madras City. I do not know about the mofussil. It may be worse. Patients are made to lie on the floor. It is something disgraceful. In spite of all my shouting, the amount is going to be spent, because I am in the minority. But after having decided to spend this huge amount, let us spend the amount wisely. After having taxed the people, let us spend the tax-payers' money wisely in meeting the

5th August 1965] [Dr. H. V. Hande.]

basic requirements of the hospital. Let us have a few model hospitals in the city so that any foreign visitor can see how nicely the institution is run. He will feel that some attention is being given to the patients. Some sort of incentive to the patients for getting treatment in the hospital should be given. Let me not be parochial in talking about the city hospitals only. Let us take all the district headquarters hospitals and see that their basic requirements are met. Whatever be the expenditure, the basic requirements should be met. The Hon. the Health Minister is not here. But I request the Hon. the Minister for Industries to inform the Health Minister of my sentiments and to say also with what poignancy I have made out my remarks.

Sir, in spite of the fact that we have spent Rs. 17 crores, we have not been able to wipe out mosquitoes. Still the city is infested with mosquitoes. In a premier city like Madras. (Interruption). I feel that mosquitoes have increased by leaps and bounds, and the mosquito menace is a serious thing. Something must be done to eradicate this mosquito nuisance. After having decided to spend huge sums, let us ear-mark a certain amount for the eradication of mosquitoes. We all know how the dengue fever affected a very large number of people sometime before. The bad effects produced by mosquito is something which I need not tell the House. Everybody knows it. Let us do something about eradicating these mosquitoes. This should be done on a war-footing.

I now come to the most important thing which most of us are neglecting. The fourth plan has completely neglected the cure of the leprosy patients. These patients are moving about in the city. I have tried to get statistics of their number. My statistics show that six to ten lakhs out of a population of 3½ crores are suffering from leprosy. In other words, one out of every 30 persons is suffering from leprosy. Leprosy is a dangerous disease. It is not like any disease which affects only the person afflicted with it. The entire society is in danger. This is one point which must be remembered. Another point is that leprosy is a disease about which we can do something. This is not like cancer. For cancer we say cure is far-fetched. But leprosy can be wonderfully cured. With a little amount of treatment, it can be brilliantly treated. I am so certain that even within one year we can cure a large number of leprosy patients. The money spent on the cure of these patients is wisely spent, because we are not putting the money down into the drain. We can do something marvellous. A huge amount of Rs. 1 crore is to be spent. The amount was Rs. 20 lakhs last time. It is not at all sufficient. Out of Rs. 40 crores Rs. 1 crore is absolutely in-sufficient. Let them ear-mark a little more amount, and let them see that leprosy patients are cured. Something must be done in this regard. In this context, we may also think of establishing beggar homes. We will link up both these things. The leprosy

patients must not be loitering in the city and in the South Arcot and North Arcot districts. The leprosy rate is fantastically high. Something must be immediately done.

Before I wind up, I want to make mention of one thing. If the amount allotted for the draft fourth plan cannot be reduced, or if we cannot remove from our minds the obsession of plan, at least let us do as wise men do. Wise men have been telling us for the past few days, 'Let us give this plan a holiday'. I am one of those who firmly believe that we should give a holiday to these plans and we should not meddle with the public money. The plans make the poor man poorer and the rich richer. Let us as our elderly statesman has said the other day give a holiday for the plan. A number of economists have come forward with this statement. Some eminent persons and economists like Masani have said the same thing. Persons like Shenoy have said that we should give a holiday to the plan. The Prime Minister has come forward in Bombay and said that we should think twice before we jump into the plans. Let us not become victims. Let us see what the great industrialist of South India, Sir A. Ramaswami Mudaliar, has said in one of his speeches on the subject. Let us not be obsessed by the plans. Let us give ourselves a chance to get out of the clutches of the Planning Commission. Let us view it realistically. Even our Industries Minister—I am very proud to say that—has come out with some wonderful statements. I fully agree with him. I congratulate him on his statement. That is, let us multiply this by five times. That is, in the third plan an amount of Rs. 80 crores was provided. Let us multiply this by five. Let us have a maximum of Rs. 400 crores. In one plan period, we had the capacity to invest Rs. 80 crores. Let us now multiply it by five times. It was a memorable speech. I was all praise for the Industries Minister. I hope his wise counsel will be appreciated by the Planning Commission. I want to express through this House that at least what the Industries Minister said about the plan should be taken note of by the Planning Commission and a realistic approach made. There is no question of one State quarrelling with another. Let all the people sit together and come to decisions.

4-40 p.m.

There is no question of a Steel Plant here and a Steel Plant there. For the Vizag Steel Plant we pay and for the Salem Steel Plant they pay. Whenever we install a Steel Plant, whether at Rourkela, Bhilai or Vizag, money is taken from everybody and the entire money is spent. Each one says, "We want a Steel Plant". This is what a neutral observer says: "In one breath you say that you want less planning outlay and in another breath you say that you want this Steel Plant and that Steel Plant." If all of us shout, "I want more amount for this or for that," then the total outlay will come to another Rs. 20,000 crores. That means the whole country will become bankrupt. Let us try to be

5th August 1965] [Dr. H. V. Hande ]

realistic. Let us take the counsel of wise people and not bother about partyisms. Let us cut our coat according to the cloth and prune the Plan if we cannot completely scrap it.

Finally, only one thing I want to say as far as the legislators are concerned. I am sure the legislators will agree with it. We will go round from constituency to constituency and try to find out the defects in each constituency. Whenever we place before the Ministers the problems of the constituency, I request the Ministers to take immediate action so that not only they may get the help of the bureaucratic machinery but also the help of the legislators. We will go on touring constituencies and assess the problems. We shall see whether a particular thing is implemented or not. If such a realistic assessment is done and if this planning is given a holiday, I think the country will be better.

* **திரு. டி. வி. தேவராஜ முதலியார்:** மன்ற உபதலைவர் அவர்களே! இப்போது நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தை முழு மனதோடு ஆதரித்து சில வார்த்தைகள் பேச முன்வருகிறேன். முன்னோர்கள் எழுதி வைத்திருக்கிறார்கள்: ஒருவர் வழிப்பயணம் போகக்கூடாது, இருவர் போனால் பூதத்துக்கு சமானம், மூன்று பேர்கள் போனால், மத்திமம், நான்கு பேர்கள் போனால் தான் நல்லது. அதைப் போல் திட்டங்கள் வகுக்கும்போது முதல் திட்டத்தை வகுக்கும்போது, இந்தத் திட்டம் எப்படி முன்னேற்றம் அடையும் என்று நினைத்தார்கள். இரண்டாவது திட்டத்தை வகுக்கும் போது, அது எந்த நிலையில் இருந்தது என்றால், பூதத்துக்கு சமானமாக இருந்தது. மூன்றாவது திட்டம் மத்திமத்தில் இருக்கிறது. நான்காவது திட்டம் நல்ல முன்னேற்றம் அடையக் கூடிய திட்டம். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில், மக்கள் மக்களாக வாழக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. கண்கண்ட தெய்வம் காந்தி மகான் வரையறுத்த "பச்சைப்பசேல் இந்தியா" என்ற வாக்குக்கு ஏற்ப இந்தத் திட்டத்தை வகுத்ததற்கு நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். நல்ல வளர்ச்சி உள்ள திட்டம் இது. உணவில் கூட ஒரு திட்டம் இருக்க வேண்டுமென்று முன்னோர்கள் சொல்லி யிருக்கிறார்கள். அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம் என்று சொன்னார்கள். நல்ல திட்டத்தைக் கொண்டுவந்து தொண்டாற்றுவது பாராட்டுக்குரிய விஷயமாகும். உணவு உற்பத்தியில் முன்னேற்றம் அடைந்து வந்தாலும், இருக்க இருக்க ஜனத்தொகை அதிகமாவதால் பஞ்சம் ஏற்படுகிறது. அதற்கும் ஒரு கட்டுப்பாடு திட்டம் எல்லாம் செய்து கொண்டு வருகிறோம். நல்ல முன்னேற்றம் அடைந்து கொண்டிருக்கிற நேரத்தில், மின்சக்தி ஒன்றை உதாரணமாகச் சொல்ல முடியும். அது உறக்கமின்றி பணியாற்றுகிறது. சூரியன், சந்திரன், காற்று இவை மூன்றும் தான் உறக்கம் இல்லாமல் பணியாற்றக்கூடியது, பூமிக்கும் தண்ணீருக்கும் மனிதனுக்கும் உறக்கம் இருக்கிறது. ஆனால் சூரியன், சந்திரன், காற்று இவைகளுக்குத்தான் உறக்கம் இல்லை என்று முன்னோர்கள் எழுதியிருக்கிறார்கள் அதைப்போல் மின்சக்தி உறக்கமின்றி, இரவிலும்,

[திரு. டி. வி. தேவராஜ முதலியார்] [5th August 1965

பகலிலும் இருக்கிறது, பணியாற்றுகிறது என்பது பாராட்டப்பட வேண்டியது. மற்றஎல்லா மாகாணத்தையும் விட நம் மாகாணம் அதிலே நல்ல முன்னேற்றம் அடைந்து இருக்கிறது என்று பாராட்டு கிறார்கள். அதைப்போல் உணவு விஷயமும். காவிரி நதி பாய்கிற இடங்கள் இருந்தாலும், எங்கள் ஜில்லா நெல் உற்பத்தியில் இரண் டாவது இடத்துக்கு வந்திருக்கிறது. மின்சக்தி மூலம் தண்ணீர் இறைத்து, விவசாயம் செய்து, நெல் உற்பத்தியில் இரண்டாவது ஜில்லா எங்கே என்றால், வட ஆற்காடு தான் என்ற புள்ளிவிவரம் சர்க்காருக்குத் தெரியும். அதைப் போல் நல்ல உற்பத்தி செய்து கொண்டு தான் வருகிறோம். சில சமயம் கால மழை சரியாக இல்லாததால் கஷ்டம் வருகிறது. முன்னோர்கள் சொல்லியிருக் கிறார்கள், ஓரெட்டில் வளராத பிள்ளை, ஈரெட்டில் பெறாத கல்வி, மூவெட்டில் பெறாத பிள்ளை, நாலெட்டில் அனுபவிக்காத இன்பம், ஐயெட்டில் பெறாத செல்வம், ஆறெட்டில் பெறாத ஞானம், ஏழெட்டில் பெறாத மோக்ஷமும், எட்டெட்டில் பெறாத புகழும் நரகத்துக்கு ஒப்பாகும் என்று சொல்லியிருக்கிறார்கள். நமது சர்க்காரும் 16 வயதில்தான் மேற்படிப்புக்குப் போகவேண்டு மென்று எழுதி வைத்திருக்கிறது. அதைப்போல் இந்த நான் காவது திட்டம் ஆரம்பிப்பதற்கு 16 வயது ஆகிறது. பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழவேண்டும் என்று சொல்கிறேன். மணப்பந்தலில் அப்படித்தான் பெரியோர்கள் ஆசீர்வாதம் பண்ணுவார்கள். அதற்குப் பொருள், 16 பிள்ளைகள் அல்ல. பதினாறு செல்வங்களையும் பெற்று பெரு வாழ்வு வாழவேண்டும் என்பது தான் பொருள். மனை, மனைவி, மக்கள், தாய், நீர், நிலம், கால்நடை, கல்வி, அறிவு, ஒழுக்கம், வலிமை, ஏவல், பெறுமை, பொன், மணி, புகழ் போன்றவை. இந்தப் பதினாறு செல்வங்களை யும் பெறவேண்டும். ஐந்து பெண் பெற்றால் அரசனும் ஆண்டி யாவான் என்றும் எழுதி வைத்திருக்கிறார்கள். அதனால் 16 செல்வங்களைத்தான் குறிப்பிடுகிறார்கள். இந்தத் திட்டம் நல்ல முறையில் வளரும் வாய்ப்பு இருக்கிறது. இது நல்ல முன் னேற்றத்துக்கு வரும் வாய்ப்பு. அதற்கு ஒத்துழைப்பு வேண்டும். அரசாங்கம் மக்களோடு ஒற்றுமையாக இருந்தால், நல்ல வாழ்வு வாழ்ந்து முன்னேற்றம் அடைய முடியும். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. முக்கியமாக உண்ண உணவுக்கு வழி தேடிக்கொண்டிருக்கிறோம். பலருக்கு இரவில் படுக்கிறதற்கு ஒரு விதமான வசதியும் இல்லை. என் நண்பர் கனம் கிருஷ்ணமூர்த்தி அவர்கள்கூட சொன்னார் கள். இருக்க வசதி இல்லாமல் இருந்து கொண்டிருக்கிறார்கள் என்று தெரியும் எல்லோருக்கும். அந்த வசதியைச் செய்து கொடுக்க வேண்டும். முதலில் சுகாதாரத்தோடு வாழ வசதி செய்ய வேண்டும். எங்கே குடிசை கட்டிக்கொண்டு வாழ்ந்தா லும், அங்கே போய் "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பதை அவர்களுக்கு சொல்ல வேண்டும். அவர்களோடு நோய் போகாது, நகரத்தையே பீடிக்கும், பிறகு மாகாணத்தை யும் பீடிக்கும். நோய் பரவக்கூடியதாகும். அவர்கள் இருக்கக் கூடிய இடத்தில் நோய் இல்லாமல் செய்யவேண்டியது அரசாங்கத் தின் கடமை. அங்கேயிருந்துதான் நோய்கள் உண்டாகின்றன.

5th August 1965] [திரு. டி. வி. தேவராஜ முதலியார்]

சுகாதார வழியை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். அவர்களிடம் போய் சுத்தமாக இருங்கள் என்று பிராபகண்டா பண்ணுவதுஅவசியம். வள்ளுவர் சொன்னர்:

"இடிப்பாரை இல்லா ஏமரா மன்னன்
கெடுப்பாரிலானுங் கெடும்"

எடுத்துச் சொல்லக் கூடிய ஆள் இல்லாவிட்டால், கெடுக்கக்கூடியவர்கள் இல்லாவிட்டாலும் தானே கெட்டு விடுவான் என்று வள்ளுவர் எடுத்துச் சொல்லியிருக்கிறர். அவர்களுக்கு சுகாதாரத்தோடு இருக்கும் வாய்ப்பை எடுத்துச் சொல்லி, அவர்களுக்குள்ள வசதியைச் செய்து கொடுத்தால், நல்ல முன்னேறறத்துக்கு வாய்ப்பு இருக்கும் என்பதுதான் என் கருத்து. நான் அதிகமாகப் பேச விரும்பவில்லை. சிதம்பரத்தின் பாடல் ஒன்று இருக்கிறது. அந்தப்பாடல்கள்தான் நமக்கு இருக்கிற பெரும் செல்வம். உயிரெனும் உடலுக்கு, உடலெனும் குடிமிக்கு, ஓயாத இரவும் பகலும் இரை தேடி, உற்று யோசிக்குமளவில் "உண்ணுவதும் உறங்குவதும் அல்லாது வேறு பயனும் கண்டதில்லை, பராபரமே". உண்ண உணவும் உறங்குவதற்கு வசதியும் செய்து கொடுத்து மக்கள் மக்களாக வாழ அரசாங்கம் நல்ல வழிகளைத் தேட வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். எனக்கு உடம்பு சரியில்லாததால் அதிகமாகப் பேசவில்லை. இந்த வாய்ப்பு கொடுத்ததற்கு நன்றி தெரிவித்துக்கொண்டு, ஆண்டவன் இந்தத் திட்டம் சரிவர நிறைவேற, மந்திரிமார்களுக்கும், சர்க்காரில் உள்ளவர்களுக்கும் நீண்ட ஆயுளைக் கொடுத்து, திடகாத்திரத்தையும் கொடுத்து ஒத்துழைக்க வேண்டுமென்று சொல்லி, கனம் அங்கத்தினர் பால சுப்பிரமணிய அய்யருக்கும் நல்ல ஆயுளைக் கொடுக்க வேண்டுமென்று கூறி, உரையை முடிக்கிறேன் வணக்கம்.

**திரு. எம். எத்திராஜுலு:** கனம் உதவித் தலைவர் அவர்களே, இந்த மன்றத்திலே நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி விரிவாக எனக்கு முன்னல் பேசிய அனைவரும் தெளிவு படுத்தியிருக்கிறர்கள். தமிழகத்திலே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு கொடுக்கப்பட்டுள்ள 291 கோடி ரூபாய்க்கு மேல், திட்ட இலக்குக்கு மேல் அதிகமாகச் செலவு செய்து, ஏறக்குறைய 340 கோடி ரூபாய் அளவுக்கு நாம் பெரும் சாதனையை தமிழகத்தில் சாதித்திருக்கிறோம் என்றால் தமிழகத்தில் மூன்றாவது திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றியிருக்கும் நிலையைப் பார்த்து, இந்தியாவின் மற்ற பகுதிகளில் இருக்கும் ராஜ்யங்கள் அனைத்தும் இன்றைக்கு தமிழகத்தைப் பார்த்துப் பொறாமைப் படக்கூடிய அளவிலே இருக்கிறது என்பதை சொல்லத் தேவையில்லை. காரணம், நம் தமிழகத்திலுள்ள கனம் அமைச்சர்கள் எந்தப் பிரச்னையையும் துருவித் துருவி ஆராய்ந்து பார்த்து காரியங்களைச் செய்கிறர்கள். இதன் காரணமாக தமிழகத்தில் நல்ல பொருளாதார வளர்ச்சியும் கல்வி வளர்ச்சியும் ஏற்பட்டிருக்கிறது. இன்று தமிழ் நாட்டில் சிறந்த அமைச்சர்களின் ஆட்சி நடந்து வருகிறது என்பதை எல்லா ராஜ்யத்தினரும் ஒத்துக் கொண்டிருக்கிறர்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. வாதத்

4-50 p.m.

[திரு. எம். எத்திராஜுலு] [5th August 1965

திற்கு வேண்டுமானால், இங்குள்ள ஆட்சியைப் பற்றி பல குறைகள் சொல்லலாம். உண்மையில், இங்கே நல்ல ஆட்சி நடக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திற்கு கொடுக்கப்பட்ட பணத்தை இந்த சர்க்கார் நல்ல முறையில் செலவழித்து இன்னும் அதிகமாகப் பணம் கேட்கக்கூடிய வகையில் திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறார்கள். திட்டங்கள் 'பெய்ல்யூர்' ஆகாதபடி ஒவ்வொன்றும் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. தமிழக அரசு அதிகப் பணம் கேட்டிருக்கும்போது மத்திய சர்க்கார் ஒதுக்கியுள்ள பணம் கொஞ்சமே என்று நினைக்கிறேன். நான்காவது ஐந்தாண்டு திட்டத்திற்கு இப்போது 750 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டாலும் நான்காவது திட்ட இறுதியில் 1,000 கோடி ரூபாய்க்கு மேல் செலவழிக்க நேரிடும் என்று நினைக்கிறேன். கல்வித் துறையிலும் தொழில் துறையிலும் உள்ள பல குறைகளைச் சொல்லி பல கோரிக்கைகளை நாம் எழுப்பியிருந்தாலும், இந்த ராஜ்ய சர்க்கார் இப்போது பணத்தைக் குறைத்துக்கொண்டு, பல காரியங்களைச் செய்த பிறகு போதிய தொகையை மத்திய அரசிடம் கேட்டுப் பெறத் தயாராயிருக்கிறார்கள் என்று சொல்ல ஆசைப்படுகிறேன். தமிழகத்தில் மூன்றாவது திட்டம் வெற்றிகரமாக நிறைவேறியிருக்கிறது. இப்போது 750 கோடி ரூபாய்க்கு பல்வேறு திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. இந்தத் திட்டச் சுருக்கப் புத்தகத்தை படிக்கும்போது எத்தனை நாள் படித்தாலும் எல்லாவற்றையும் முழுதும் படிக்க முடியாது. இதைப் படிக்கும்போது தமிழகத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்கும், கல்வி வளர்ச்சிக்கும், தொழில் வளர்ச்சிக்கும் எத்தனையோ திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன என்பதை யாரும் ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியாது. அதையெல்லாம் நன்றாகப் படித்துத் தெரிந்துக்கொள்ள சில நாட்கள் பிடிக்கும்; சர்க்கார் ஒதுக்கியிருக்கும் ஓரிரு தினங்களில் முடியாது. கடந்த மூன்று திட்டங்களில் சாதித்தவற்றையும் நான்காவது திட்டத்தில் சாதிக்கப்போவதையும் மிகவும் விளக்கமாக ஆங்கிலத்திலும் தமிழிலும் புத்தகத்தில் சர்க்கார் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதைப் படிப்பதற்குத் தான் நேரம் வேண்டுமே தவிர படித்து வியாக்யானம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. நான்காவது திட்டமும் நல்லமுறையில் நிறைவேறும் என்று நம்புகிறேன். முதலாவதாக பின்னடைந்த சமூகத்தினருக்காக இந்த நான்காவது திட்டத்தில் 45½ கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஹரிஜனங்களுக்கும், பின்னடைந்தவர்களுக்கும் கல்வியில் உபகாரச் சம்பளத்திற்காக 21 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. மதிய உணவு, தொழிற் கருவிகள், உழவு மாடுகள், உபகாரச் சம்பளம் ஆகியவைகள் தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கொடுக்க சுமார் 20 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இன்னும் அதிகம் உதவி செய்ய வேண்டும். இன்று பின்தங்கிய இனத்தவர்களாக 158 சமூகத்தினர் இருக்கின்றனர். இவர்களில் ஏராளமான பேர் ஏழைகள். எப்படியாவது படித்து முன்னேற உணர்ச்சியுடன் படிக்கிறார்கள்.

5th August 1965] *[திரு. எம். எத்திராஜுலு]*

ஆனால் போதிய மார்க்குகள் வாங்காத காரணத்தினால் இவர்களுக்கு உபகார சம்பளம் கொடுக்கப்படுவதில்லை. யாருக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கலாம் என்பது மார்க்குகள் அடிப்படையில் தான் நிர்ணயிக்கப்படுகிறது. பின்தங்கிய வகுப்பினர் முன்னேற்றத்திற்காக வருஷாவருஷம் கோடிக் கணக்கான ரூபாய்கள் ஒதுக்கப்படுகின்றன. அதுவும் பற்றாக் குறையாகத் தான் இருக்கிறது. இன்று பின்தங்கிய சமூகத்தினர் எவ்வளவு உயர்த்தப்பட்டிருக்கிறார்கள், அவர்கள் எல்லாத் துறைகளிலும் உயர்த்தப்பட்டிருக்கிறார்களா என்று சர்க்கார் ஒரு கமிட்டியை அமைத்து அதன் மூலம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை உயர்த்தப்படுவதற்காக ஒரு தனி இலாகா இருக்கிறது; அவர்களுக்கு வேண்டிய சலுகைகளையெல்லாம் அந்த இலாகா செய்ய முற்படுகிறது. அதேபோல பின்தங்கிய சமூகங்களும் முன்னேற வேண்டும் என்பதை சர்க்கார் ஒத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் நலனையும் அவர்கள் முன்னேற்றத்தையும் கவனிப்பதும் சர்க்காரின் பொறுப்பாக இருக்க வேண்டும். இன்று பின்தங்கிய சமூகத்தினர் எத்தனையோ பேர் குடியிருக்க வீடில்லாமல் கஷ்டப்படுகின்றனர், உழுது பயிரிட சொந்த நிலம் இல்லாமல் இருக்கிறார்கள். சில சமூகத்தவர்கள் உத்தியோகத்தில் ஒரு சதவிகிதம்கூட இல்லை. கல்லூரி படிப்பதற்கும் அவர்களால் முடியவில்லை. அவர்கள் முன்னேறிய சமூகத்தோடு சேர்க்கப்பட்டிருப்பதால் அவர்கள் அந்த சமூகத்தினருடன் உத்தியோகத் துறையிலும் கல்வித் துறையிலும் போட்டியிட வேண்டியிருக்கிறது. இவர்களைப் பிரித்து தாழ்த்தப்பட்ட இனத்தவர் பட்டியலில் சேர்த்தால்தான் அவர்கள் முன்னேற முடியும். சோஷலிச சமுதாயம் அமைய முடியும். இவர்களுக்கான உபகாரச் சம்பளத் தொகையை அதிகப்படுத்த வேண்டும். மார்க்கு அடிப்படையில் இல்லாமல் வருவாய் அடிப்படையில் இவர்களுக்கு உபகாரச் சம்பளம் வழங்க வேண்டும்; இப்படிச் செய்தால்தான் இவர்கள் முன்னேற முடியும். எத்தனையோ சமூகங்கள் இன்னும் முன்னேற முடியவில்லை. அவர்கள் பொருளாதாரத் துறையிலும் பிற துறைகளிலும் முன்னேற வேண்டும். அவர்களுக்கு உழவு கருவிகள் முதலியவைகளும் கொடுத்தால் நல்லது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் வந்து விட்டது.

5 p.m.

அடுத்தபடியாக நமது அதிர்ஷ்டவசமாக தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு நமது தொழில் அமைச்சர் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறார்கள். நாளுக்கு ஒரு தொழில் என்ற முறையில் தமிழ்நாட்டில் வளர்ந்து கொண்டு வருகிறது. நேற்று பேசியவர்கள் சிலர் வேறு ராஜ்யங்களில் இதைவிட தொழில் அதிகமாக வளர்ந்திருப்பதாகக் கூறினார்கள். நானும் வெளி ராஜ்யங்களில் சென்று பார்த்திருக்கிறேன். இவ்வளவு பெரிதாக தைரியமாக பெரும் பெரும் தொழிற்சாலைகளை தமிழ் நாட்டில் ஏற்படுத்துவதற்காகவே கங்கணம் கட்டிக்கொண்டு வெளிநாட்டுக்குச் செல்லும்போதெல்லாம் அங்கே இருக்கிற தொழில்களை எல்லாம் தெரிந்துகொண்டு வந்து அதன்படி

இங்கேயும் தொழில்களை வளர்த்துவரும் தொழில் அமைச்சர் அவர்கள் தமிழ் நாட்டுக்குக் கிடைத்தது உண்மையில் நம்முடைய அதிர்ஷ்டம்தான் என்று நினைக்கிறேன். இரண்டாவது திட்டத்தில் 175 லட்சம் ரூபாய் செலவு செய்து 237 தொழில் பிரிவுகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். மூன்றாவது திட்டத்தில் 500 தொழில் பிரிவுகளைக் கொண்ட 22 தொழில் பேட்டைகளை உண்டுபண்ணியிருக்கிறார்கள். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆயிரம் ஏக்கர் நிலப்பரப்பு கொண்ட 12 தொழில் பேட்டைகள் அமைக்க இந்த திட்டத்தில் சொல்லியிருக்கிறார்கள். இவ்வளவு இருந்தும் தென்னார்க்காடு ஜில்லாவில் இன்னும் ஒரு தொழில் பேட்டை வரவில்லை என்பதுதான் என்னுடைய குறை. ஒவ்வொரு நகரத்திலும் ஒரு தொழில் பேட்டை இருக்க வேண்டுமென்பதுதான் தொழில் அமைச்சரின் ஆசை.

கனம் திரு. ஆர். வெங்கட்டராமன்: விருத்தாசலம் எந்த ஜில்லாவில் இருக்கிறது என்று தெரிந்துகொள்ளவேண்டும். வேண்டுமானால் கடலூரில் வேண்டுமென்று கேட்கலாம்.

திரு. எம். எத்திராஜுலு: அதைத்தான் நான் குறிப்பிடுகிறேன். ஜில்லா தலைநகரில் கடலூரில் ஒரு தொழிற்பேட்டை வைப்பதாக இரண்டாண்டு காலமாக முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். இன்னும் வந்தபாடில்லை. ஜில்லா தலைநகரான கடலூரில் ஒரு தொழில்பேட்டை அமைத்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நெய்வேலியைப் பற்றிச் சொல்லலாம். நூற்று எழுபத்தைந்து கோடி ரூபாயில் பெரிய திட்டம் உருவாக்கிக் கொண்டிருக்கிறது. எட்டு உப தொழிற்சாலைகள் வந்துகொண்டிருக்கின்றன. அவைகளாவது தாலுகாவிற்கு ஒரு தொழிற்சாலையாக வைத்தால் அங்கங்கு இருக்கிற பின்தங்கிய மக்கள் ஏழை அரிஜன மக்கள் அதிகமாக இருக்கிற பகுதிகளில் அவர்களுக்கும் வேலை வாய்ப்பு கிடைக்க ஏதுவாக இருக்கும். இப்போதிருக்கிற தொழிற்சாலைகள் எல்லாம் நெய்வேலியிலேயும் பக்கத்திலிருக்கிற விருத்தாசலத்திலும் தான் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. தென்னார்க்காடு தலை நகரான கடலூருக்கு ஒன்றும் வரவில்லை. ஆகவேதான் நான்காவது திட்டத்தில் வரக் கூடிய ஆயிரம் ஏக்கர் பரப்புள்ள நிலத்தைக் கொண்ட 12 தொழிற்பேட்டைகளில் தென்னார்க்காடு ஜில்லாவுக்கு அவசியம் ஒரு தொழிற்பேட்டை கொடுக்க வேண்டுமென்று பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

இப்போது இந்தத் திட்டத்தில் நான்கு நூற்பாலைகள் வர இருக்கின்றன. அவற்றில் நான்கு பொதுத்துறையிலும் மூன்று கூட்டுறவுத் துறையிலும் கொடுக்க இருக்கிறார்கள். கோவை, மதுரை போன்ற இடங்களைப் பார்க்கும்போது எங்கள் ஜில்லாவில் அதற்கான சகவசதிகளும் இருக்கின்றன. அதையால் தென்னார்க்காடு தலைநகருக்கு நூற்பாலை ஒன்று கொடுக்கவேண்டுமென்று பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். எல்லா ஜில்லாக்களைப் பார்க்கும்போது அங்கெல்லாம் இண்டஸ்டிரியல் ஸ்கூல், பாலிடெக்னிக்குகள் வந்திருக்கின்றன. ஆனால் எங்கள் ஜில்லாவில் ஒரு இண்டஸ்டிரியல் ஸ்கூல் கொடுத்திருக்கிறார்கள். பாலிடெக்னிக்

**5th August 1965]** *[திரு. எம். எத்திராஜுலு]*

ஸ்கூல் கேட்டுக்கொண்டிருக்கிறோம். இந்தத் திட்டத்திலாவது ஒரு பாலிடெக்னிக் கண்டிப்பாக தென்னாற்க்காடுக்குக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக இன்றைக்கு வீட்டு வசதிக்காக நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 42 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். அதை வரவேற்கிறேன். இரண்டாவது திட்டத்தில் நாலரை கோடியும் மூன்றாவது திட்டத்தில் பத்தேகால் கோடியும் ஒதுக்கி எறக் குறைய தொழிலாளர்களுக்கு 5,700 வீடுகளுக்கு மேல் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். குறைந்த வருமானக்காரர்களுக்கு 4,500 வீடுகளுக்கு மேல் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். சமுதாயத்தில் பின் தங்கிய ஹரிஜனங்களுக்கு 5,500 வீடுகளுக்கு மேல் கட்டிக் . கொடுத்திருக்கிறார்கள். வீட்டு மனைக் கட்டுகள் வாங்க ஒரு லட்சத்திற்கு மேல் மூன்றாவது திட்டத்தில் கொடுத்திருக்கிறார்கள். இன்னும் சென்னை நீங்கலாக மற்ற ஜில்லாக்களில் ஐந்து லட்சம் மனைக்கட்டுகள் வாங்கிக் கொடுப்பதற்காக திட்டம் இருக்கிறது. அதையெல்லாம் வரவேற்கிறேன். இவ்வளவு உதவி செய்திருந்தாலும் பின்தங்கிய இனத்தவர்களுக்கு ஏன் ஒரு வீடுகூட கட்டிக்கொடுக்க அரசாங்கம் முன் வரவில்லை? அதற்கு திட்டம் வேண்டுமென்று பலமுறை இந்த மன்றத்தில் கேட்டுக்கொண்டு இருக்கிறேன். குறைந்த வருமானக் காரர்கள் ஆறாயிரம் ரூபாய் வருமானமுள்ளவர்களாக இருந்தால் 10 ஆயிரம் கடன் கொடுத்து வீடு கட்ட வசதி செய்கிறார்கள். பின் தங்கிய வகுப்பினர்களில் பொருளாதார வசதியில்லாதவர்கள் வீட்டு வசதிக்கு கடன்கோர முடியாது. சர்க்காரும் கொடுக்காது. இருந்தாலும் எத்தனையோ பின் தங்கிய வகுப்பினர் இருக்கிறார்கள். அவர்களில் ஒரு செண்டு நிலம் கூட இல்லாதவர்கள் இருக்கிறார்களே. அவர்களுக்கு 1 செண்டு, 2 செண்டு நிலமாவது வீடுகட்டிக் கொள்ள வாங்கிக் கொடுக்கக் கூடாதா ? அரிஜனங்களுக்கு 750 ரூபாய் நிதி உதவியும் அளித்து ஆயிரம் ரூபாயளவில் வீடு கட்டிக் கொடுக்கும் நிலை இருக்கும்போது பின்தங்கிய வகுப்புக்கு கட்டிக் கொடுக்கக் கூடாதா? இந்த நான்காவது திட்டத்திலாவது அதை அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எறக்குறைய ஐயாயிரம், பத்தாயிரம் ரூபாய் என்ற அளவில் வசதியான வீடுகளாக இல்லாவிட்டாலும் ஆயிரம் இரண்டாயிரத்தில் இரண்டு சுவர் வைத்து ஓடுபோட்டு ஒரு கதவு வைத்து இரண்டு செண்டு நிலத்திலாவது வீடு கட்டிக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். கிராமத்தில் உள்ள பின் தங்கிய வகுப்பினர் மிகப் பரிதாபமான நிலையில் இருக்கிறார்கள். கிராமத்திலுள்ள கருமார் தொழிலாளர்கள், மருத்துவர்கள், சலவைத் தொழிலாளிகள் மிகப் பின்தங்கிய நிலையில் இருக்கிறார்கள். கிராமத்தார் நினைத்தால் இவர்களை எதுவேண்டுமானாலும் செய்யமுடியும். அப்படிப்பட்ட நிலையில் அந்த மக்கள் தங்கள் குறைகளைச் சொல்லமுடியாமல் மனதில் வைத்துக்கொண்டு கிராமங்களில் வாழ்கிறார்கள். அந்த மக்களின் கஷ்டத்தை குறைகளை அவசியம் பரிசீலித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வீட்டு வசதி போர்டு நிலம் வாங்குகிறார்கள். குறைந்த வருமானக்காரர்களுக்கு

ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலம் ஒவ்வொரு ஜில்லாவிலும் வாங்கிக் கொடுக்கப்படுகிறது. அப்படிப்பட்ட நிலையில் ஒரு ஐம்பது, நூறு வீடுகளாவது ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள பின்தங்கிய வகுப்பாருக்குக் கட்டிக்கொடுத்தால் நன்றாக இருக்கும். அவர்களுடைய குறையை ஓரளவு போக்குவதாக இருக்குமென்று கேட்டுக்கொள்கிறேன். பின் தங்கிய ஏழைகளுக்கு இரண்டு, மூன்று சென்டிலாவது வாங்கிக்கொடுக்க வேண்டுமென்று கருணை கூர்ந்து 15 கோடி ரூபாய் அதற்காக ஒதுக்கியதற்கு மகிழ்ச்சியடைகிறேன்.

துறைமுகத்தை எடுத்துக்கொண்டு பார்த்தால் நடுத்துறை துறைமுகங்களான நாகப்பட்டிணம் போன்றவைகள் எல்லாம் எடுத்துக்கொண்டு வேலை நடந்துகொண்டிருக்கிறது. அதிகமாக அதை விளக்கிச் சொல்ல நேரமில்லை. இன்னும் துரிதமாக வேலை செய்யவேண்டும். இன்னும் எட்டு சிறிய துறைமுகங்கள் தமிழகத்தில் இருக்கின்றன. அதில் மிக முக்கியமாக உள்ளது பரங்கிப்பேட்டை துறைமுகம் என்பதை அடிக்கடி இந்த மன்றத்தில் சொல்லியிருக்கிறேன். அங்கிருந்து ஏற்கெனவே சிங்கப்பூர், பினங்கு போன்ற இடங்களுக்கு Rallis பிரதர்ஸ் கம்பெனி மூலமாக மணிலா, பயிறு, தானியங்கள் ஏற்றுமதியாகின்றன. அதே இடத்தில் இரும்பு உருக்காலை இருந்ததாகவும் தெரிகிறது. நான் இதை பொறுப்பில்லாமல் சொல்லவில்லை. இப்போது யாரை அனுப்பி பார்த்தாலும் பரங்கிப்பேட்டை துறைமுகத்தில் அக்காலத்தில் இரும்பை உருக்கியதன் அடையாளங்கள் தெரிகின்றதைப் பார்க்கலாம். இரும்பு உற்பத்தி செய்த உருக்கு துண்டுகள், தண்டவாளங்கள் அங்கே காணப்படுகின்றன. இங்கே எழும்பூர் ஸ்டேஷனில் உள்ள சில இரும்பு சாமான்களில் பார்த்தால் 'மேட் இன் போர்ட்ட நோவோ' என்று இருக்கிறது. இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பாக திரு. வேதரத்னம் பிள்ளை அவர்கள் தலைமையில் அறுபது எம்.எல்.ஏ-க்கள் கொண்ட ஒரு குழுவை அழைத்துப் போய் அந்தத் துறைமுகப்பகுதியைக் காட்டினேன். அவர்கள் பார்த்துவிட்டு அந்தத் துறைமுகத்தை உடனடியாக அபிவிருத்தி செய்யவேண்டும், ஏற்றுமதி இறக்குமதி செய்ய லாயக்கான இடம், கடற்கரை ஓரமாகவும், களிப்பு மண் உள்ளதாகவும், ரயில் வசதி வாய்ந்ததாகவும் ரோடு வசதியோடும் இருக்கிறது என்றும், இதை யெல்லாம் பார்த்துத்தான் வெள்ளைக்காரன் அங்கே துறைமுகத்தைவைத்தான் என்றும் ஆகையால் அதை உடனே அபிவிருத்தி செய்யவேண்டுமென்று அந்த எம்.எல்.ஏ-க்கள் குழு சர்க்காருக்கு ஒரு மெமோரண்டம் தயார் செய்து அனுப்பியிருந்தார்கள். அதன் மேலே நானும் ஒரு கேள்வி கேட்டபோது எனக்கு அப்போது நிதி அமைச்சராக இருந்த திரு. ஸி. சுப்பிரமணியம் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள், இதைப் பரிசீலித்து நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொள்ளலாம் என்று உறுதி கூறியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட துறைமுகம் இந்த நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இடம் பெறவில்லை. அதையும் இந்த நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொண்டு, அபிவிருத்தி செய்ய கேட்டுக்கொள்கிறேன்.

5-10 p.m.

5th August 1965] [திரு. எம். எத்திராஜுலு]

அடுத்து, மருத்துவத்தைப்பற்றி இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு கோடிக் கணக்கான பணத்தை நான்காவது ஐந்தாண்டுத திட்டத்தில் ஒதுக்கி இருக்கிறோம். முதல் ஐந்தாண்டு திட்டத்தில் ஒரு டாக்டருக்கு 6,500 வியாதியஸ்தர்கள், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், 5,900; மூன்றாவது திட்டத்தில், 4,600 பேர்கள்; இப்படி நாளுக்கு நாள் மருத்துவ வசதி அதிகரித்துக்கொண்டுதான் வருகிறது. தலைவலி என்றால் கூட வீட்டிலே வைத்தியம் செய்துகொள்ள மனது போகவில்லை; உடனடியாக ஆஸ்பத்திரிக்கு போய் மருந்து சாப்பிட வேண்டுமென்று போகிறார்கள், சிறு சிறு வியாதிகளுக்கு அவரவர்கள் வீட்டிலே வைத்தியம் செய்துகொள்ள வைத்தியம் முறைகள் அடங்கிய ஒரு சிறிய புத்தகத்தை அரசாங்கம் தயாரித்துகொடுத்து ஆஸ்பத்திரிக்கு அதிக கும்பல் வராமல் தடுக்க முடியும். காலில் இடித்து இரத்தம் வந்தாலும் ஆஸ்பத்திரிக்கு ஓடுகிறார்கள். பழைய வைத்திய முறை எங்கே போய்விட்டது. என்றே தெரியவில்லை. பழைய பண்பாடு மக்கள் மத்தியில் வளர ஏற்பாடு செய்ய வேண்டும். இப்படி செய்தால் ஓரளவுக்கு கூட்டத்தை குறைக்க முடியும். வேலூர் ஆஸ்பத்திரியில் பார்க்கும்போது எப்படி இந்த வியாதியை தீர்க்கிறீர்கள் என்று கேட்டேன். இப்போது வருகிற வியாதியஸ்தர்களின் குறிப்பை வைத்துக் கொள்கிறோம், மருந்து கொடுத்து வீட்டுக்கு அனுப்புகிறோம். ஆறு மாதம் சென்று, பிறகு வந்தால், என்ன வியாதியால் ஏற்கெனவே வந்தாய் என்று கேட்டு, அவர்கள் அந்த வியாதியைச் சொன்னால், தேதியைக் கேட்டுத் தெரிந்து கொண்டு கேஸ் ஷீட்டை எடுத்துப் பார்க்கிறோம். அந்த நோயை வைத்து இப்போது ஏற்பட்ட நோயையும் பார்த்து என்ன மருந்து கொடுக்கலாம் என்று ஆதாரமாக வைத்துச் செய்கிறோம் என்று சொன்னார்கள். ஆகவே நம்முடைய ஜெனரல் ஹாஸ்பிடல், பெரிய ஆஸ்பத்திரி, டெல்லியில் கூட இருக்கிறது, நான் போய்ப் பார்த்தேன். கேஸ் ஷீட் மெயின்டெனன்ஸ் அதற்கான செலவு ஆகி விட்டுப் போகட்டும். ஒரு மாதம் இருந்து வைத்திய சிகிச்சை செய்து கொண்டேன், ஆறு மாதத்திற்கு பிறகு சென்றாலும் கூட அதை எடுத்துப் பார்த்து என்ன வியாதி ஏற்கெனவே இருந்தது. இப்போது என்ன வந்திருக்கிறது என்று தெரிந்தால், எப்படிப்பட்ட வியாதியையும் தீர்க்க முடியும், ஆகவேதான் அப்படிப்பட்ட கேஸ் ஷீட் மெயின்டெனன்ஸ்-க்கு டிபார்ட்மெண்டுகளை ஏற்படுத்தி அவரவர்களுக்கு தனித்தனியாக இந்த கேஸ் ஷீட் மெயின்டெயின் செய்து சிகிச்சை பெறுவதற்கு முதலில் ஜெனரல் ஹாஸ்பிடலிலாவது ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதற்காக மெடிகல் சர்விஸ்ஸிலிருந்து இரண்டொருவர் மத்திய சர்க்கார் மூலமாக பயிற்சிக்கு அனுப்பியும் கூட அந்த டிபார்ட்மெண்டில் வைக்கவில்லை என்று கேள்விப்பட்டேன். இதற்கும் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சாத்தனூர் அணைக்கட்டில் இரண்டாவது முறையாக 4,565 மிலியன் கன அடியிலிருந்து, 8,100 மிலியன் கன அடி தண்ணீர் விடப்

போகிறார்கள் என்று கண்டு மிக மிக சந்தோஷப்படுகிறோம். திருக்கோயிலூர் மக்கள் பூரிப்படைந்து வாழ்த்துகிறார்கள். திருக்கோயிலூர் பக்கம் வரும் தண்ணீரை விருத்தாசலம் வரை வேண்டும் என்று சொன்னார்கள். அதையும் கொஞ்சம் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அத்தோடு கோமுகி நதியில் அணைக்கட்டு கட்டப்படுகிறது. குறுக்கே 6 மைல் நீளம் வேறொரு கால்வாய் வெட்டி தண்ணீரைத் திருப்ப இருக்கிறார்கள். அதிலே 5,000 ஏக்கருக்கு வரப் போகிறது. அந்த தண்ணீர் கள்ளக்குறிச்சிக்கு வந்தால் உளுந்தூர்பேட்டை வழியாக வரவேண்டும் என்று அந்தப் பகுதி மக்கள் முன்னதாகவே கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதையும் செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அத்துடன் கடலூர் திருவத்திபுரம் அணைக்கட்டு மூலமாக 2,000 ஏக்கருக்கு தண்ணீர் பாய்வதற்கு பல ஆண்டுகளாகவே அணைபோடும்படி கேட்டு வருகிறோம். மழை காலத்தில் வரும் தண்ணீரை தேக்கினால் இரண்டாவது கட்ட பயிர் செய்ய ஏதுவாக இருக்கும். அங்கே அணை கட்டினால் கடலூர் நகரப் பகுதியில் உள்ள 2,000 ஏக்கருக்கு தண்ணீர் பாயும் என்று சொல்லிக் கொள்கிறேன். திண்டிவனம் பக்கத்திலுள்ள மரக்காணம் என்ற இடத்துக்கு அருகே கந்தாடு என்ற இடத்தில் சிறிய அணை போட்டு, கடலில் வீணாகப் போய் விழும் நீரைத் தடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். 1960 முதலே சொல்லப்பட்டு வருகிறது, யாரும் அதை எடுத்துச் செய்ய முன்வரவில்லை. நேரடியாகக் கடலில் போய் விழும் தண்ணீரை, இப்படிப்பட்ட அணைக்கட்டு கட்டி தேக்கினால், அங்கேயிருக்கிற சுமார் 600 ஏக்கர் நிலத்துக்குப் பாயும் என்று தெரிவித்து வருகிறார்கள். கடலூருக்குப் பக்கத்தில் உப்பலவாடி கிராமத்தில் 500 ஏக்கருக்கு மேல் தண்ணீர் பாய வசதி இருந்தும், உப்புத் தண்ணீர் கலக்கின்ற காரணத்தால் நெற்பயிர் உற்பத்தி செய்ய முடியவில்லை. அங்கேயிருந்த இஞ்ஜினியரை அழைத்துக் கொண்டு போய்க்காட்டி அணையைக் குறுக்கே போடவேண்டும், பெரிய பள்ளம் வெட்டி கடலில் கொண்டுபோய் விட வேண்டுமென்று சொன்னோம். அதற்கு லட்சக் கணக்கான பணம் வேண்டுமென்று சொன்னார்கள். அதையும் இந்த நேரத்தில் கவனத்தில் எடுத்துக்கொள்ளவேண்டும். அத்துடன் இந்த மருத்துவத் துறையில் ஒன்று சொல்ல மறந்துவிட்டேன். எங்கள் ஜில்லா பின் தங்கிய ஜில்லா. எண்ணற்ற டாக்டர்களைத் தயார் செய்வதற்காக நான்கு மருத்துவக் கல்லூரிகள் வைக்கப் போகிறீர்கள். பணிவாகக் கேட்டுக் கொள்கிறேன். பின் தங்கிய ஜில்லா, பின் தங்கிய இனத்தவர், தாழ்த்தப்பட்ட மக்கள் வாழுகிற மணிலாக் கொட்டை ஜில்லா என்று சொல்வார்கள். அப்படிப்பட்ட ஜில்லாவில் மருத்துவக் கல்லூரி ஒன்று வேண்டும். நான்கில் ஒன்று தென்னாற்காடு ஜில்லாவில் எந்தப் பகுதியிலாவது கொடுங்கள் என்று சொல்லிக்கொண்டு, கூட்டுறவுத் துறையைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லி முடிக்கிறேன். ஏராளமாக பணத்தை நம் அரசாங்கம் அவர்கள் மூலமாகக் கொடுக்க ஏற்பாடு செய்கிறது. துரிதமாக வேலை நடப்பதற்கு நாம் தூண்ட வேண்டும். கூட்டுறவுத் துறையில் பின் தங்கிய இனத்தவர்களுக்கு எங்கெங்கே தேவையோ அங்கே

5th August 1965] [திரு. எம். எத்திராஜுலு]

யெல்லாம் கூட்டுறவு சொசைட்டி ஏற்படுத்த வேண்டுமென்று சர்க்கார் உத்திரவிட்டும் கவனிப்பதில்லை. கால தாமதம் செய்து கொண்டிருக்கிறார்கள். குறிப்பாக ஒன்று சொல்லுகிறேன். நான் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னதாக நமது கூட்டுறவு அமைச்சரைக் கேட்டபோது, இந்தத் தமிழகத்தில் இருக்கக்கூடிய பின் தங்கிய வகுப்பான சலவைத் தொழிலாளர்களுக்கு, தொழில் கருவிகள் வாங்கவும், பொருளாதாரத் தரம் உயரவும் கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்துக் கொடுப்பதாக சொன்னார்கள். தொழில் துறை அமைச்சர் அவர்கள் 3 லட்சம் ரூபாய் கொடுத்து 13 ஜில்லாக் களிலேயும் கூட்டுறவு சங்கத்தை அமைத்துக் கொடுத்து இருக்கிறார் கள். ஒவ்வொரு சங்கத்துக்கும் 100 மெம்பர்கள் என்றுதான் கடன் வசதி கொடுத்தார்களே தவிர, 2, 3 ஆண்டுகளாகியும் மேலும் அதிகமான வசதி செய்து கொடுக்கவில்லை. இதைப்பற்றி கூட்டுறவு ரிஜிஸ்ட்ராரைக் கேட்டால் இவ்வளவு தான் கொடுக்க முடிந்தது என்கிறார்கள். இதற்கு மேல் கொடுக்க முடியாது என்று சொல்கிறார்கள். ஆகவே, ஒவ்வொரு ஜில்லாவிலேயும் 20, 30 ஆயிரம் பேர்கள் சலவைத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். 100 பேர்களுக்குத்தான் சொசைட்டி இருக்கிறது. மேலும் கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் உத்தரவு இட்டாலும், ரிஜிஸ்ட்ரார் கவனிப்பதில்லை. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத் திலாவது ஒவ்வொரு சொசைட்டிக்கும் 100 பேர் என்று இருப்பதை விட்டு, வருஷா வருஷம் கொஞ்சம் கொஞ்சமாக அதிகமாக்கிக் கொடுக்கும்படி ரிஜிஸ்ட்ராருக்கு உத்தரவு இடும்படி கேட்டுக் கொண்டு இந்த நேரத்தை எனக்கு ஒதுக்கியதற்கு நன்றி தெரிவித்து முடித்துக்கொள்கிறேன்.

5-20 p.m.

* திரு. கே. வி. ராமசாமி : கனம் உதவித் தலைவர் அவர்களே, இந்த நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஆதரித்துப் பேச விரும்புகிறேன். "திட்டமிட்டுச் சட்டமியற்று, சட்டப்படி நடந்துகொள்" என்ற முறை மகத்தானது. ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்டமும் நல்ல முறையில் நிறைவேறியுள்ளன. இதுவரையிலும் சிற்சில காரியங்களைச் செய்து கொண்டுவந்தோம். குழந்தை பிறந்த பிறகு அது கவிழ்ந்து, நகர்ந்து, தவழ ஆரம்பிக் கிறது. அதற்குப் பின் அதற்கு நடை பழக்குகிறோம். பிறகு அதன் உடம்பை நல்ல முறையில் போஷித்து பள்ளிக்கு அனுப்பி, அதன் அறிவு வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்கிறோம். அதற்குப் பிறகு திண்ணைப் பள்ளிக்கூடத்திலிருந்து—அதாவது சின்னப் பள்ளிக் கூடத்திலிருந்து—காலேஜுக்கு அனுப்பி, அதன் பின் அவனை ஆண் மகனாக ஆக்கி உலகிற்கு சேவை செய்வதற்கு அனுப்புகிறோம். அந்த முறையிலேயே நாட்டையும் நன்றாக உருவாக்க அரசாங்கத் தார் பல நல்ல காரியங்களை செய்து வருகிறார்கள் என்பது எல்லோ ருக்கும் தெரிந்த உண்மை. சில திட்டங்களில் சில சிறு சிறு குறைகள் இருக்கத்தான் செய்யும். எவ்வளவு நிறைய நன்றாகச் சாப்பிட்டாலும் உணவில் ஒரு ரோமமோ நூலோ இருந்து அது தொண்டையில் சிக்கிக் கொண்டால் சாப்பிடுவது கஷ்டமாகி விடுகிறது. எனவே கஷ்டங்கள் ஏற்படுவது சகஜமே. அதனால் திட்டங்களைக் கைவிட முடியாது. திட்டங்களில் கோளாறுகள்

[திரு. கே. வி. ராமசாமி] [5th August 1965

இருந்தாலும் அவைகளை நீக்கி பல நல்ல காரியங்களை நம் சர்க்கார் செய்து வருகிறது. நாடு சுதந்திரம் பெற்று 17, 18 ஆண்டுகள் ஆகின்றன. சுதந்திரத்திற்கு முன்பு இருந்த நிலையுடன் இன்றுள்ள நிலையை ஒப்பிட்டுப் பார்த்தால் நாட்டில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் புலனாகும். சுதந்திரத்திற்கு முன் எத்தனை கிராமங்களில் பள்ளிகள் இருந்தன என்று பார்க்க வேண்டும். நான் படித்த காலத்தில் எங்கள் கிராமத்திலிருந்து 12 மைல்களுக்கு அப்பால் ஒரு ஹைஸ்கூல் இருந்தது. அந்தப் பள்ளிக்கூடத்திற்குச் செல்ல 12 மைல்கள் நடக்க வேண்டும்; அல்லது மூன்று நான்கு மைல்கள் நடந்து சென்று அதற்குப் பிறகு ஜட்கா வண்டியில் செல்ல வேண்டும். இப்போது நிலைமை அப்படி அல்ல. ஒவ்வொரு கிராமத்திலும் இப்போது ஹைஸ்கூல் இருக்கிறது. இரண்டு, மூன்று மைல்களுக்கிடையில் இப்போது பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. சரியானபடித் திட்டமிட்டு திட்டங்களை நன்றாக நிறைவேற்றியதால் இவ்வளவு பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. பள்ளிகள் நிறைய இருந்தாலும், பள்ளிப் பிள்ளைகளின் அறிவு எப்படி இருக்கிறது என்று சிலர் பரிகாசம் செய்கிறார்கள். அந்தக் காலத்தில் ஆசிரியர்களுக்கு நல்ல மதிப்பு இருந்தது. எல்லோரும் ஆசிரியர்களை நன்றாக மதித்தார்கள். அன்று பிள்ளைகள் அமைதியுடனும் கட்டுப்பாட்டுடனும் இருந்தார்கள். இன்று பிள்ளைகள் எப்படி இருக்கிறார்கள்? 2-ம் தேதி என் சம்பந்தமாக உரிமைக் கமிட்டியின் ரிப்போர்ட்டு சபையில் சமர்ப்பிக்கப்பட்டது. பள்ளி மாணவர்கள் அந்த நிலையில் இன்று இருக்கிறார்கள். அவர்கள் சட்ட சபை மெம்பர்களைக்கூட சபைக்கு வரும்போது உபத்திரவம் செய்கிறார்கள் என்பது குறித்து நாம் வருத்தப்படாமல் இருக்க முடியாது. சிகரெட்டுக் குடிப்பவர்கள் தான் மாணவர்கள், பூட்ஸும் பாண்டும் போட்டுக்கொள்பவர்கள்தான் மாணவர்கள் என்று இந்தக் காலத்து மாணவர்கள் நினைக்கிறார்கள். அந்தக் காலத்தில் அப்படி அல்ல. அன்று காந்திஜி மாதிரி மாணவர்கள் துண்டைக் கட்டிக்கொள்வார்கள். அவர்கள் உபாத்தியாயர்களிடம் பயபக்தியுடன் இருப்பார்கள். உபாத்தியாயர் வந்தால், பெற்றோர்கள் 'ஐயர் வந்துவிட்டார்' என்று சொல்வார்களே தவிர உபாத்தியாயர் வந்துவிட்டார் என்று சொல்ல மாட்டார்கள். அரிசி, பருப்பு, மிளகாய், காய்கறி ஆகிய எது கேட்டாலும் மாணவர்கள் தங்கள் வீட்டிலிருந்து உபாத்தியாயருக்குக் கொண்டு போய்க் கொடுப்பார்கள். மாணவனின் வீடு உபாத்தியாயர்களுடைய சொந்த வீடு போல இருந்தது நகரங்களில் எப்படி இருந்ததோ, எனக்குத் தெரியாது. கிராமங்களில் குடியானவர்கள் உபாத்தியாயர் எதைக் கேட்டாலும் கொடுப்பார்கள். 'உபாத்தியாயருக்குக் கொடுத்தேன்' என்று பையன் சொன்னால் தாய்மார்களும் ஒன்றும் சொல்ல மாட்டார்கள். உபாத்தியாயர்களும் நன்றாக பாடம் சொல்லிக்கொடுப்பார்கள். ஒரு உபாத்தியாயரிடம் நான் படித்தேன். அவர் ஒரு நாள் சொல்லிக்கொடுத்ததை மறு நாள் தலைகீழாக ஒப்பிக்க வேண்டும். ஏதேதோ கணக்குகள் படிக்க வேண்டியிருந்தது. இந்தக் காலத்து மாணவர்களுக்கு அவை தெரியுமோ என்னமோ தெரியவில்லை. இன்று எஸ்.எஸ்.எல்.சி படிப்பவனிடம் 16 × 9 என்ன என்றால் உடனே பதில் சொல்ல

5th August 1965] [திரு. கே. வி. ராமசாமி]

மாட்டான். அதற்கு அவன் பதில் சொல்ல நேரம் ஆகும். அந்தக் காலத்தில் படிப்பிற்கு அதிகச் செலவும் ஏற்படவில்லை. அன்று ஓலைச் சுவடியில் படித்தோம். இன்று பையன்கள் தூக்கிச் செல்லும் புஸ்தகங்களைப் பார்த்தால் முதுகு ஒடிந்துவிடும் போல் இருக்கிறது. இவ்வளவு புஸ்தகங்கள் இருந்தும் அறிவு வளரவில்லை. இவ்வளவு படிப்புப் படித்தால் பனை மர உயரத்திற்கு அறிவு வேண்டுமே; அப்படி வரவில்லையே என்று நான் வருத்தப்படுவது உண்டு. இத்தனை புத்தகங்களில் அத்தியாவசிய அறிவுக்கான புத்தகங்கள் மிகக் குறைவு.

மாணவர்களுக்கு சிறு வயதிலிருந்தே தேசிய ஆர்வம் வளர வேண்டும் என்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொன்னார். அவர் ஆசிரியராதலால் குழந்தைக்கு எப்போது எதைச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று அவருக்குத் தெரியும். இதையெல்லாம் ஆசிரியர்களுக்கு விட்டுவிடுகிறேன். ஐந்து வயது ஆன பிறகு படிப்பிற்குப் பணம் வேண்டியபோது பையன் வந்து அழுவான். அது தான் நமக்குத் தெரியும். மற்றவைகளை ஆசிரியர்கள் கவனிக்கட்டும். ஆசிரியர்களின் நலனை கவனிக்க வேண்டியது நம் முக்கிய கடமை. சுதந்திரம் அடைந்துள்ள நாட்டை மாணவர்கள் காத்துப் பரிபாலிப்பதற்கான நல்லறிவைத் தரக்கூடிய நல்ல பாடப் புத்தகங்களை அவர்கள் படிப்பதற்கு நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வகை செய்ய வேண்டும். சுதந்திரம் பெற்ற இந்த பாரத நாட்டைப் பரிபாலிக்க வேண்டிய கடமை இனிமேல் இளைஞர்களைச் சேர்ந்தது. ஆகையால் தேசிய வீரர்களுடைய சரித்திரத்தை, சுதந்திரம் பெறுவதற்கு அவர்கள் செய்த தியாகங்களை, பட்ட கஷ்டங்களை இளைஞர் தெரிந்துகொள்ளும்படி பாடத்திட்டம் அமையவேண்டும். எப்படி அடிமைத் தளையிலிருந்து விடுபட்டோம் என்பதையெல்லாம் சந்ததிகள் உணரச்செய்யவேண்டும். அப்படிப்பட்ட சுதந்திரத்திற்காக தங்களுடைய சம்பாத்தியம், தொழில், மனைவி, மக்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு போராடியவர்கள், கஷ்டத்தை அனுபவித்தவர்கள் இன்றைக்கு தெருத்தெருவாக பிச்சை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். சாப்பாட்டுக்குக் கூட இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டு இருக்கிறார்கள் என்பதை அரசாங்கத்திற்குத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் இந்த நிலைமையில் இருக்கிறார்கள் என்றால் சோஷலிச மயமாகக் கூடிய இந்த நேரத்தில் இந்த நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்ட தியாகிகள் கஷ்டப்படுவதை உயிரோடு இருந்து கொண்டு பார்த்துக்கொண்டிருக்கிறோம். மாடமாளிகை, கூட கோபுரங்களில் சிலர் வாழவும், சபாட்டுக்குக்கூட இல்லாமல் கால்போய், கை இழந்து, கண்ணைப்பறிகொடுத்து விடுதலைக்குப் பாடுபட்டவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பிச்சை எடுப்பது அகவுரவம் என்று மானத்தோடு வாழ்வதற்காக பட்டினியோடு [illegible]இஞ்சாக உயிரை விட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த [illegible]காவது ஐந்தாண்டுத்திட்டத்தில் அவர்களுக்காக ஏதாவது இருக்கிறதா என்று பார்த்தேன். அதைப்பற்றி ஒன்றும் இல்லை. அதற்காக கவலைப்படாமல் இருக்கமுடியவில்லை. அவற்றை முதலில் செய்யவேண்டும். இல்லாவிட்டால் துரோகிகள் என்றுதான் நம்

5-30 p.m.

மைச் சொல்வார்கள். அவர்கள் அப்படிக் கஷ்டப்படாமல் சம்பாத்தியத்தில் ஈடுபட்டிருந்தால், கள்ளமார்க்கெட்டில் தொழில் நடத்தியிருந்தால் இப்போது எவ்வளவோ சேர்த்து வைத்திருக்க முடியும். தேசம் பெரிது என்று அதற்காக தியாகம் செய்ததால் அவர்கள் இன்று கஷ்டப்படுகிறார்கள். அதைக் கவனிக்கவேண்டு மென்று மீண்டும் மீண்டும் தெரிவித்துக்கொள்கிறேன். சர்க்கார் ஏதோ செய்கிறார்கள். ஆனால் சரிவர அவர்களுக்கு அது கிடைக்க வில்லை. உத்தியோகத்தில் உள்ளவர்கள் குழந்தைகளுக்கு சலுகை காட்டப்படுகின்றன. சிலருக்கு பூமி கொடுக்கிறார்கள் அந்த நிலத்தை வாங்குவதற்கும் அவர்கள் கையில் உள்ளதை செம்புதவலை எல்லாவற்றையும் விற்று கணக்குபிள்ளையைப் பார்த்து ஏதாவது கொடுத்துத்தான் பெறவேண்டியிருக்கிறது. முதலில் பத்து ஏக்கர் என்றார்கள். பிறகு பாசன வசதி வந்ததும் ஐந்து ஏக்கர்தான் என்றார்கள். அதையும் சிலருக்குத்தான் கொடுத்தார்கள். அதையும் வாங்கி அனுபவிக்க முடியாமல் பலர் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கொடுத்த நிலத்தின் பட்டாவை பிறகு உத்தியோகஸ்தர்களுக்கு மாற்றிவிட்டார்கள். அந்த ஏழை கள் எல்லாம் சென்னைக்கு வந்து மந்திரிகள் வீட்டுக்கு நேரடியாகச் சொல்லமுடியாது. அவர்கள் வாழ்வை குடும்பங்களை வாழச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்கள் ஜில்லா வின் தியாகிகள் சங்கத்திற்கு தலைவனாகவும், மாகாண தியாகிகள் சங்கத்திற்கு உபதலைவனாகவும் நான் இருப்பதால் இந்தக் குறை கள் நன்றாகத் தெரிகின்றன. இந்த இடத்தில் அந்தகுறைகளை நான் தெரிவிக்காவிட்டால் என்னை அவர்கள் பழிகாரன், மோசக் காரன் என்று சொன்னாலும் அது குறைவு இல்லை.

அடுத்தபடியாக விவசாயிகளுடைய நிலைமைக்காக நாம் ரொம்ப நல்ல காரியங்களைச் செய்திருக்கிறோம். அதைப்பற்றி யாரும் குறை சொல்லமுடியாது. நல்ல காரியங்களைச் செய்கிறோம் என் றால், பாராமல் கெட்டது பயிர், ஏறாமல் கெட்டது குதிரை என்று சொல்வது போல நல்ல காரியங்களுக்காக சட்டம் போட்டுவிட் டால் மட்டும் போதாது. அது அவர்களை அடைகிறதா என்று பார்க்கவேண்டும். குறுக்கே நுழைந்து அவற்றைக் கெடுக்கும் பெருச்சாளிகளைப் பற்றிப் பேசிவருகிறோம். ஆகவே எந்த உதவி யும் விவசாயிகளுக்கு நேரடியாகப் போய் சேரும்படி செய்வது சர்க்காரின் கடமை. கிணறு வெட்ட கடன் மானியங்களைக் கொடுக் கிறோம். அவையெல்லாம் உடனே போய் வாங்குவது கஷ்டமாக இருக்கிறது. வெளியிடங்களில் அதிக வட்டிக்கு வாங்குவதைவிட சர்க்கார் சலுகைபெற்று கடன் வாங்கவேண்டுமென்றால் அதற்கு அதிகமாக செலவாகிறது. அதை நீக்கவேண்டும். எங்கள் ஜில்லா ரொம்ப வரண்ட பிரதேசம். சாதாரணமாக சிறிய கிணறுகள், ஆழமில்லாத கிணறுகள் என்றால் அதனுடைய ஆழம் அறுபது அடி. ஆழமுள்ள கிணறு என்பதற்கு அளவே இல்லை. அது அமெரிக்காவைக் கூட பிடிக்கும் ஆழத்திற்குப் போய்விடும். மேலே யிருந்து பார்த்தால் தண்ணீர் இருக்கிறதே தெரியாது. இரண்டு மூன்று மோட்டார்களை வைத்து தண்ணீர் இறைக்க வேண்டி யிருக்கும் ஜில்லா எங்கள் ஜில்லா. வெள்ளைக்காரன் காலத்தில்

5th August 1965] [திரு. கே. வி. ராமசாமி]

அங்கு மேல்பவானித் திட்டம் போடுவதற்காக கல் எல்லாம் போட்டு அளந்து வைக்கப்பட்டிருக்கிறது. நேற்றைக்குக் கூட எங்கள் ஜில்லாவிலிருந்து சிலர் அமைச்சர்களைப் பார்ப்பதற்காக அந்த மேல்பவானித் திட்ட சம்பந்தமாக வந்திருந்தார்கள். ஒவ்வொரு தாலுகா வாரியாக வந்துகொண்டுதான் இருக்கிறார்கள். மந்திரிகள் அங்கே வரும்போது சொல்லிக்கொண்டுதான் இருக்கிறோம். அவர்களும் இஞ்சினியர்களைக் கூப்பிட்டு சொல்கிறார்கள். அவர்கள் பிறகு பார்க்கலாம் என்று கடத்திக்கொண்டே போகிறார்கள். நாங்கள் ஊருக்குப் போகும்போது எங்களைப் பார்த்து மக்கள் என்ன மந்திரியைக் கேட்டீர்களா பார்த்தீர்களா என்று கேட்பார்கள். ஆகட்டும் என்றார்கள் என்போம். அதற்கு அவர்களும் ஆகட்டும், ஆகட்டும், இந்த 1967 வரட்டும், பிறகு ஆகட்டும், என்று ஒரு போடு போடுவார்கள். அவர்களை சமாதானமாக சிரிக்க சிரிக்க ஏதாவது சொல்லி சமாளிக்கிறோம். 'பார்த்தோம், அவசியம் செய்யப் போவதாக சொன்னார்கள், இப்போது சிறிய வேலைகளைச் செய்து வருகிறார்கள், இனிமேல் இதுபோன்ற பெரிய வேலைகளை எடுத்து செய்வார்கள். வந்து விடும் கவலைவேண்டாமென்று' ஏதோ சாக்குபோக்குகளை சொல்லி கடத்திவருகிறோம். ஆகையால் மேல் பவானித் திட்டம் எங்கள் ஜில்லாவுக்கு மிகவும் அவசியம். பாசனம்கூட அவர்கள் கேட்கவில்லை. ஆங்காங்கே குளங்கள், குட்டைகள் வெட்டி தண்ணீர் வரும்போது அவற்றை நிரப்பி வைத்துக்கொள்ள வசதியிருந்தால் போதும். அதுதான் எங்கள் கோரிக்கை. இன்னொன்று: விவசாயிகளுடைய குழந்தைகளைப் படிக்க வைக்கிறது ரொம்ப கஷ்டம். முக்கியமாக எங்கள் ஜில்லாவிலுள்ள கவுண்டர்கள்—வேளாளர்களுக்கு கொடுத்திருக்கிற பட்டம் முன்னேற்ற சமூகம் பார்வார்டு கம்யூனிட்டி. இது எப்படி ஆயிற்று என்று தெரியவில்லை. இவன் விவசாயத்தைக் கவனிப்பானா, பிள்ளைகளுக்கு புத்தகம் வாங்கிக் கொடுத்துக் கொண்டிருப்பானா? வருவாய் இல்லை என்ற சமயத்தில், பள்ளிக்கூடத்துக்கு சம்பளம் கொடுக்க வேண்டும், புத்தகம் வாங்கவேண்டும் என்று வந்தால் என்ன செய்வான்? பயணம் போகிறதற்கு எக்ஸ்ட்ரா பீஸ் எல்லாம் கொடுக்க வேண்டியிருக்கிறது. படித்து விட்டு தாசில்தார், கலெக்டர் வேலையா பார்க்கப் போகிறாய், போதும் படிப்பு என்று கோபத்தில் சொல்வான். இவனுக்கு உயர்ந்த சமூகப் பட்டம். நான் தான் தற்குறியாகப் போனேன், 3 பேனா ஸ்டீல் முறிந்து போய் 4-வது பேனாவில் கையெழுத்துப் போட முடிந்தது என்று பெருமையாகப் பேசிக் கொள்ளுவான், நம் பையனையாவது கையெழுத்துப் போடுகிற மாதிரி படிக்க வைப்போம் என்று படிக்கவைத்தால், காலேஜில் கொண்டு வந்து சேர்க்கலாம் என்று வந்தால், இடம் இல்லை. எங்களிடம் வருகிறார்கள் சிபாரிசு பண்ணுங்கள் என்று. மந்திரிகளிடம் போனால், பார்வார்டு கம்யூனிட்டி, நாங்கள் என்ன பண்ணுவது என்கிறார்கள். இந்த மாதிரி யார் பண்ணினார்கள்? நாம் தானே நிர்ணயித்தோம். ஜாதி மதங்களைப் பாரோம் என்று பாரதியார் சொல்லிய பிறகு ஏழை என்றும் அடிமை என்றும் எவனும் இல்லை ஜாதியில்லை என்று கூறி, நாம் தான் ஸோஷலிஸ சமுதாயத்தை

5-40 p.m.

ஏற்படுத்தி உள்ளோம். இந்த நேரத்தில் ஏழை, பணக்காரன் என்று பார்த்துச் செய்தால் அது பரவாயில்லை. இதை விட்டு விட்டு, நாம் இந்த மாதிரி திட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு போனால், அதை ரொம்ப ஜனங்கள் வெறுக்கிறார்கள். கீழே இருந்து வந்து படித்து விட்டு, இடம் கிடைக்காமல் கஷ்டப்படக் கூடிய ஒருவன் என்ன நினைப்பான். மனதில் உருகி உருகி சாக வேண்டிய நிலைமையில் இருக்கிறான். ஆகவே இந்த மார்க்குக்கு கீழேயுள்ள பிற்பட்ட சமூகத்தை சேர்ந்த ஒருவர் கூட, இரண்டு குழந்தைகள் படிக்கின்றன, ஒன்று நல்ல மார்க்கு, ஒன்று குறைவான மார்க்கு, ஒன்றுக்கு காலேஜில் இடம் கொடுத்து விட்டு, அதிக மார்க் வாங்கிய மற்றவனுக்கு இடம் கொடுக்கவில்லை என்றால், படித்த குழந்தையின் எண்ணம் எவ்வாறு இருக்கும்? இது சோஷலிஸத்துக்கு ஒப்பாகுமா என்பது தான் என் கேள்வி? ஆகவே அப்படிப்பட்ட நிலைமையை அடியோடு எடுத்து விட்டு, ஏழை பணக்காரன் என்று வைத்தாலும் பரவாயில்லை. அது கூட படிக்கிற பசங்களுக்கு, ஏழை, பிச்சைக்காரன் என்று தெரியுமா? அதனால் நல்ல மார்க்கு வாங்குகிறவனுக்கு நல்ல வாய்ப்பு இருக்க வேண்டும். நமக்கு ஜாதி, மத பேதம் இல்லை என்று சொல்லிக் கொண்டு போனால், அது சரியில்லை என்று மீண்டும் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஆகவே, அடுத்தபடியாக, பயிர் இன்ஷூரன்ஸ் விஷயத்தைப் பற்றி பல தடவை பேசியிருக்கிறேன். விவசாயிகள் எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள், எவ்வளவு நஷ்டப்படுகிறார்கள் என்று பார்க்கும்போது, அதெல்லாம் பட்டுக்கொண்டு பயிர்த் தொழில் செய்தாக வேண்டும் என்று கடவுள் அவன் தலையில் எழுதியிருக்கிறானா? எதற்காக அவன் அந்தத் தொழிலைச் செய்ய வேண்டும்? சர்க்கார் ஏன் அதற்காக மானியம் கொடுக்கக் கூடாது? நமக்கு உணவு இல்லாமல் போனால், உலகம் அழிந்து போகும். அப்படியிருக்கும் நிலையில், அந்த விவசாயத்தைச் செய்கிற ஒருவனுக்கு உற்சாகம் அளிக்கக் கூடாதா? பயிர்கள் இன்ஷூரன்ஸ் திட்டத்தை ஏன் கொண்டு வரவில்லை என்று எனக்குத் தெரியவில்லை. விளையாட்டுக்காகப் பேசுவதா? உண்மைக் கருத்துக்களைத் தெரிந்து இந்தச் சட்ட மன்றத்தில் பேசிக் கொண்டிருக்கிறேனா அல்லது சட்டமன்றத்தின் நேரத்தை வீணாக்க வேண்டுமென்று அலட்சியம் செய்து பேசிக்கொண்டிருக்கிறேனா என்று கூட எனக்கு அச்சமாக இருக்கிறது. விவசாய உற்பத்தி அதிகமாக வேண்டும் என்றால், விவசாயிக்கு தகுந்த ஊதியம் கொடுக்க வேண்டும். அவர்களுக்கு வரும் ஆபத்துக்களைத் தடுத்து, ஆதாவு கொடுத்து, சலுகைகள் கொடுத்து, மானியத்தைக் கொடுத்து, நல்ல காரியங்கள் செய்தாலொழிய, விவசாயிகள் முன்னேற முடியாது, முடியாது என்பதைத்தான் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். காரணம் கால்நடைகளை எடுத்துக் கொள்ளுங்கள். என்ன விலை ஆகிறது தெரியுமா? ஒரு ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்குகிறான். ஒரு சின்ன நோய் வந்தால் மாண்டு போகிறது. திரும்ப வாங்க வேண்டும் என்றால், பணத்துக்கு என்ன செய்வது? ஒரு ஆயிரம் ரூபாய் என்றால் பெரிய காரியம். நமக்கு வேண்டுமானால் அலட்சியமாக இருக்கலாம். சம்பாத்தியம் பண்ணினவர்களுக்கு. நமக்கு 250 ரூபாய்

5th August] [திரு. கே. வி. ராமசாமி]

மாதம் கொடுக்கிறார்கள், நான்கு மாத சம்பளத்தை வைத்து, கஷ்டப்பட்டு ஒரு வேளை கஞ்சியைக் குடித்துக் கொண்டு, சமாளிக்கலாம். நான் அப்படித்தான் செய்து கொண்டு இருக்கிறேன். இப்படியே வந்தால் என்ன செய்வது? சோளம் பூச்சி விழுந்து கெட்டுப் போய் விட்டது. பருத்திக்கு அடிக்கிற மருந்துக்கு ஆகிற செலவுக்குக் கூட பருத்தி விளைகிறதில்லை. எனக்குத்தான் அப்படி கஷ்டம் ஏற்படுகிறதோ என்னவோ. என்பேரில்தான் கடவுளுக்கு கோபமோ என்னவோ ? கஷ்டமான சூழ்நிலையில் விவசாயிக்கு உதவி செய்யாமல், உணவு உற்பத்தியைப் பெருக்கு என்றால், எப்படி முடியும்? விலை ஏறிப் போய்விட்டது, இறங்க வேண்டும் என்றால், எப்படி இறங்கும் ? உணவு உற்பத்தியை அதிகப் படுத்தினாலொழிய, விலைவாசியை இறக்க முடியாது. ஆகவே விவசாயிகளுக்கு தகுந்த ஆர்வத்தை ஊட்டி உணர்ச்சியைக் கொடுத்து நல்ல விதத்தில், நான்காவது திட்டத்தில் விவசாயிகளுக்கும் தியாகிகளுக்கும் நல்ல முறையில் செய்து, படித்த மாணக்கர்களுக்கு கல்லூரிகளில் இடம் கிடைப்பதற்கு வேண்டுவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எத்தனை ஆயிரம் கொடுத்தாலும் பரவாயில்லை, இடம் கிடைத்தால் போதும் என்று சொல்லுகிறார்கள். ஒவ்வொரு மாணவனுக்கும் 10, 15 பேர்கள் சிபாரிசு பண்ணுவதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். எதற்கு வேண்டுமானாலும் ரெடி. அந்தக் குறைகள் எல்லாம் இல்லாமல் நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நல்ல முறையில் நாடு முன்னேற்றம் அடைய எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிந்து, அமைச்சர்களும் வேண்டுவன செய்து, விவசாயிகள், தியாகிகளை மனதில் வைத்து, முக்கியமான அவர்களை மறந்து விடாமல், வேண்டுவன செய்ய வேண்டுமென்று அடிப்பணிந்து வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். ஜெய் ஹிந்த்.

DEPUTY CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow. 5-47 p.m.

The House then adjourned.



## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules and Orders.

* 171. *Notification issued with G.O. Ms. No. 2023, Home, ment and Local Administration, dated 13th March 1965 making amendmens to the rules relating to restriction and control to regulate the use of porambokes in ryotwari tracts by panchayats [Laid on th Table of the House under Section 179 (4) of the Madras Panchayats Act, 1958 (Madras Act 35 of 1958).]*

* Laid on the Table of the House on 30th July 1965.

[5th August 1965

* 171. *Notification issued with G.O. Ms. No. 2023, Home, dated 9th June 1965 exempting from payment of tax for the vehicle bearing registration No. MDE. 8585 belonging to the United Nations International Children's Emergency Fund and assigned to Sri Avanashilingam Home Science College, Coimbatore. [Laid on the Table of the House under section 11 (2) of the Madras Motor Vehicles Taxation Act 1931 (Madras Act III of 1931).]*

**B. Reports, Notifications and other papers.**

* 27. *Notification issued with G.O. Ms. No. 2834, Industries, Labour and Co-operation (Labour), dated 1st June 1965 making amendment to the Minimum Wages (Madras) Rules, 1953.*

* 28. *Short review of the activities of the Public Works Department during the first half of the year 1963-64 in so far as they relate to Major Building Schemes.*




* Laid on the Table of the House on 31st July 1965.

## APPENDIX.

[*Vide* answer to Starred Question No. 51 on page 267–267]

(*a*) Yes.

(*b*) (i) The following steps have been taken by the Government to relieve the difficulties of the weavers in the co-operative sector :—

(1) The Government have sanctioned a temporary advance of Rs. 50 lakhs to the Tamilnadu Handloom Weavers' Co-operative Society for the purose of increased procurement of handloom cloth produced by the primary weavers' co-operative societies including silk, artsilk and other non-cotton and mixed fabrics.

(2) Government have increased the rate of rebate on wholesale sales of handloom cloth made by Weavers' Co-operative Production Societies from 3 Paise to 5 Paise for the period from 1st June 1965 to 31st July 1965.

(3) Consumers' Co-operatives are also given reimbursement of rebate of 5 Paise in the rupee in respect of the sales of handloom cloth procured by them from Weavers' Co-operative Societies for the period from 1st June 1965 to 31st July 1965.

(4) Sale of silk and artsilk, mixed, non-cotton fabrics made by Weavers' co-operative production societies are also made eligible for the rebate of 5 Paise in the rupee for the period from 1st June 1965 to 31st July 1965.

(ii) No.

